# Create your own Toons!!

FREE Funfaces sticker






Colouring has never been so much of fun.
And now there's more...
Mix 'n Match and create your own Toons with the New Funfaces sticker free along with every pack of

Reynolds™

ARTOONS™

Long Colouring Pens

Fun Strokes that go on and on

# அம்புலிமாமா



ஜனவரி 2000

## பொருளடக்கம்

மதிமுகம் : 102 புன்னகை : 5




Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai-600 026 on behalf of Chandamama India Limited, Chandamama Buildings, Vadapalani, Chennai-600 026. Editor: Viswam


### சிறப்புப் படைப்பாக



தங்க சிம்மாசனம்



விதியின் விளையாட்டு



முதலாவது சுதந்திரப் போர்



கவியின் வாக்கு பலிக்கும்

THE MOST
ENDEARING
GIFT
YOU CAN
THINK OF
FOR YOUR
NEAR AND DEAR ONES
FAR AWAY



# CHANDAMAMA

GIVE THEM
A
MAGAZINE
IN THE LANGUAGE
OF THEIR CHOICE

ASSAMESE, BANGLA, ENGLISH, GUJARATI, HINDI, KANNADA, MALAYALAM, MARATHI, ORIYA, SANSKRIT, TAMIL AND TELUGU

AND LET THEM ENJOY THE WARMTH
OF THE HOME AWAY FROM HOME

## SUBSCRIPTION

BY AIR MAIL TO ALL COUNTRIES

Six issues Rs. **300**
Twelve issues Rs. **500**
by surface mail within India
Twelve issues Rs. **120**

Send your remittances
by Demand Draft or Money Order
favouring 'Chandamama India Limited'

to:

PUBLICATION DIVISION
CHANDAMAMA INDIA LIMITED
CHANDAMAMA BUILDINGS, VADAPALANI, CHENNAI-600 026


Founded by
CHAKRAPANI
B. NAGI REDDI
Editor
VISWAM
Editorial Advisors
RUSKIN BOND
MANOJ DAS
Designing & Technical Advisor
UTTAM
Publisher
B. VISWANATHA REDDI
Director Marketing
V. MADHUSUDHAN



**HEAD OFFICE**
Chandamama Buildings
Vadapalani, Chennai-600 026
Tel: 4841778 Fax: 4835298

**OTHER OFFICES**

BHUBANESWAR
116-B, B.D.A, Duplex House
Baramunda
Bhubaneswar-751 003
Orissa. Phone: 55 0534

DELHI
Flat No. 415, 4 th Floor
Pratap Bhawan
5, Bahadurshag Zafar Marg
New Delhi-110 002.
Phone: 2270199

MUMBAI
2/B Naaz Buildings
Lamington Road,
Mumbai-400 004
Phone: 3889763-3886324-3877110
Fax: 3889670

# நம்பிக்கை நேரம்

நம்பிக்கையும், எதிர்பார்ப்புகளும் நிறைந்த ஆரோக்கியமான ஒரு சூழல் உலகெங்கும் நிலவுகிறது. ஒரு புதிய நூற்றாண்டின்... ஒரு புதிய ஆயிரமாவது வருஷத்தின் நுழை வாயிலில் நாம் காலடி எடுத்து வைக்கிறோம்.

இரண்டாயிரமாவது ஆண்டானது, 20 ஆம் நூற்றாண்டின் கடைசி வருடமா அல்லது 21வது நூற்றாண்டின் முதல் வருடமா என்பது பற்றிய சர்ச்சை இன்னும் முடியவில்லை. அது சிறிய விஷயம். புதிய வருடத்தை இந்த இரண்டு நூற்றாண்டுகளுக்கும் இடையேயான பாலமாக நாம் கருதுவோம்.

புதிய நூற்றாண்டை.... புதிய ஆயிரமாவது வருஷத்தை நோக்கி நம்பிக்கைகள் மற்றும் எதிர்பார்ப்புகளுடன் நாம் அடியெடுத்து வைப்பதில் சிறப்பான முக்கியத்துவம் ஏதாவது இருக்கிறதா என்றால் இருக்கிறது என்றே கூறலாம்.

இந்த விஷயத்தில் எங்கள் நம்பிக்கையானது நல்லதே நடக்கும் என்கின்ற நம்பிக்கையாகும். அதே சமயம் எதிர்பார்ப்பு என்பது ஒளிமயமான எதிர்காலம் பற்றிய எதிர்பார்ப்பு ஆகும்.

இருப்தாம் நூற்றாண்டு மனிதன் பல துரதிர்ஷ்டங்களினால் துன்பங்களை அனுபவித்தான். உலகயுத்தங்கள், இந்தியநாடு பிரிந்தது போன்ற துரதிர்ஷ்டங்கள் மனிதனாலும், புயல், நிலநடுக்கம் போன்றவை இயற்கையாலும் நிகழ்ந்தவை.

உலகளாவிய மனிதநேயம், அணுவாயுதங்களை முடிவுக்குக் கொண்டு வருதல்,... இப்படி பல உயர்ந்த குறிக்கோள்களை இன்றைய மனிதன் உணரத் துவங்கியுள்ளான். எதிர் காலத்தில் இன்னும் சிறப்பாக-அறிவு பூர்வமான பார்வையும், சிந்தனைத் தெளிவும், ஒற்றுமையுணர்வும், மனித நேயமும் கொண்டவர்களாக மனிதர்கள் விளங்குவார்கள் என எதிர்பார்ப்போம்.

நிறுவனர்

பி. நாகிரெட்டி

சக்கரபாணி



# அம்புலிமாமா




அரை நூற்றாண்டிற்கு மேலாக அம்புலிமாமா இந்தியக் குழந்தை-களிடையே அவரவர்களது தாய் மொழிகளிலும் ஆங்கிலத்திலும் சமஸ்கிருதத்திலும் வானவில் போல் வண்ணப் பாலமாகத் திகழ்ந்து வருகிறது.

லட்சக்கணக்கான இளம் வாசகர்களும் அவர்களது பெற்றோர்களும் பாராட்டி வரும் தனிச்சிறப்பு பெற்ற ஒரு அலாதி முயற்சி இது.

புதிய நூற்றாண்டிலும் இரண்டாயிரமாவது ஆண்டிலும் உங்கள் பத்திரிகை புதிய நோக்குகளை எடுத்துக் காட்டுகிறது.

தன் ஆலோசக ஆசிரியர்களாக பிரபலக் கதாசிரியர்களான ரஸ்கின் பாண்டையும் மனோஜ்தாஸையும் சேர்த்துக் கொண்டுள்ளது.

**சிறந்த பொருளடக்கம் கொண்டது தான்**



## ■ இந்தியாவின் உயர்நிலை :

உலகில் பல நாகரீகங்கள் உள்ளன. ஆனால் இந்தியாவில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தொடர்ந்து இருந்து வரும் நாகரீகத்தையும் கலாச்சாரத்தையும் போல வேறு எந்த நாட்டிலும் இருப்பதாகக் கூற முடியாது. இது எப்படி நிலைத்திருக்கமுடிந்தது? ஆம் பழங்காலக்கதைகளாலும் கடந்தகால அதிசய மனிதர்களின் செய்கைகளாலுமே என்பதே காரணம்.

## ■ இந்தியா : அன்றும் இன்றும் :

இன்றைய கவஹாட்டி அன்று பிர்ாக்ஜோதிஷபுரமென்று ஏன் அழைக்கப்பட்டது சிறு சிறு தீவுகளான இன்றைய மும்பாயி எவ்வாறு மாபெரும் தொழில் நகரமாக உருவாகிய்து? உலகிலேயே நீண்டகாலமாக அதிக எண்ணிக்கையில் நகரங்களைக் கொண்டு அதன் ஜீவநாடிகளாக விளங்குவதும் இந்தியாவே. பழங்கதைகளும் வரலாற்றுச் சான்றுகளும் அதன் இன்றைய நிலை.

## ■ இன்றைய உலகம் :

நமக்குத்தேவையான விஷயங்களைக் கூர்ந்து கவனிப்பது.

## ■ இம்மாதப் பிரமுகர் :

அந்தந்த மாதத்தில் தம் செய்கையால் புகழடைந்தவரின் வாழ்க்கை வரலாறு

## ■ இந்தியாவை இனம் காண்போம் :

இந்தியப் பண்பாடு இலக்கியம், பழம்பெருமை ஆகியவைபற்றிய வினா விடைகள், கருத்தும் கொண்டு கல்வி புகட்டும் கதைகள் குறைந்தது ஆறு இருக்கும். இவைபோக மற்றும் பல துணுக்குகளும் ஆன்றோர் மொழிகளும் இடம் பெறும்.

■ அம்புலிமாமா-2000 ஆண்டின் புதிய பொழுது புலரும் போது நீங்கள் அடி எடுத்து வைக்கையில் உங்களுடனுள்ள ஆருயிர்த்தோழன்.





## THANK YOU THE FOURTH ESTATE!

The news of the reappearance of *Chandamama* was no doubt a delight for the young and that was only expected, but what gave us an added reassurance was the warm coverage of the event by the media. Several major newspapers, in English and other languages, carried the good tide to their readers and the BBC and the Doordarshan Metro (*Aaj Tak* of TV Today) telecast interviews with the publishers highlighting the spirit behind the publication–which is to familiarise the young with the different aspects of the heritage of India through tales, legends, quizzes, and other features, while inspiring them to enter the new millennium with a faith in the future.

We thank the media and wish them a bon voyage into the new era along with *Chandamama*.

Simultaneously, we wish the same to our numerous readers and would-be readers, writers, distributors, agents, and other collaborators and well-wishers who reiterated their support to the publication as soon as the news of its re-launch reached them.

— Publisher

## MORE FOR OUR READERS

We are overwhelmed by the welcome extended by our readers on hearing about the relaunching of their favourite magazine and by their reaction on seeing the first issue for December 1999.



We are extremely grateful for their words of praise, unequivocal support,encouragement, and suggestions.



Among them are puzzles, quizzes, painting contests, and essay-writing competitions which will tap their talents. All these are being planned.



Our subsequent issues will carry details. Our readers may watch out for the announcements. Meanwhile, keep writing to us.

—Editor

# செய்திச் சுடர்

## மூழ்கிப் போன துவாரகையின் அடையாளங்கள்

ஸ்ரீ கிருஷ்ணர் வாழ்ந்த நகரமே துவாரகை என்பது புராணங்கள் கூறும் செய்தி. ஆனால் ஸ்ரீ கிருஷ்ணரின் காலத்துக்குப் பிறகு இந்த நகரம் கடலில் மூழ்கி விட்டது. இந்திய கடல் சார்ந்த தொல்லியல் துறையின் மூத்த ஆய்வாளர் டாக்டர் ஆர். எஸ். ராவ் பல வருடங்களாக துவாரகை பற்றி ஆய்வுகளைச் செய்து வருகிறார்.

துவாரகையில் ஸ்ரீ கிருஷ்ணர் பயன்படுத்திய கட்டிடக்கலைத்



தொழில் நுட்பங்களில் ஒன்று இன்றும் பயன்படுத்தப்பட்டு வருகிறது என்கிறார் டாக்டர் ராவ்.

## பூமியில் வாழ்ந்த மிகப் பெரிய உயிரினம்

தென்கிழக்கு ஆக்லஹாமாவில் 60 தொன் எடையும் நீண்ட கழுத்துடன் 60 அடி உயரமும் கொண்டு வாழ்ந்து மடிந்த ஒரு டைனோசரைக் கண்டு பிடித்துள்ளனர்.

எந்த ஒரு ஆறாவது மாடி வீட்டின் ஜன்னலையும் அது மிகச் சுலபமாக எட்டிப் பார்த்துவிடுமாம். இந்த உயிரினத்தை சராபாசிடன் என அழைப்பர். நடக்கும் போது பூமியைக் குலுக்கும் ராட்சதப் பல்லி என்பது இதன் பொருளாம்.



## வயது முதிர்ந்த நடைப்பிரியர்

எங்கு சென்றாலும் கால்நடையாகச் செல்வது 128 வயதில் மரணமடைந்த காரிர் என்ற ஜோர்டான் நாட்டவரின் பழக்கம். தமது இறுதிக் காலம்வரை அவர் நடந்து கொண்டே இருந்தார். ஆனால் அவரது இளம் பிராயத்தில் ஜோர்டான் அரசர் அப்துல்லாவுடன் குதிரையிலும் ஒட்டகங்களிலும் பயணம் செய்துள்ளார்.



128 பேரப் பிள்ளைகள் மிகப் பெரிய கொள்ளுப் பேரப் பிள்ளைகள் என இவர் குடும்பம் மிகவும் அகலமானது!

# Eat Healthy,

# Think Better.




The Indian ethos of the unity of mind and body is as ancient as our culture. And this rich Indian heritage has inspired dynamic new motto at Britannia.

The new Britannia captures the very essence of purity, energy and freshness, implicit in all our food products.

After over seven decades of being an inseparable part of your daily life, now Britannia ushers you, into a healthier and tastier future.



வேதாளம்
சொல்லும் கதை

# கல்வி கற்றுவிட்டால்...?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு அவன் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ எந்த நோக்கத்தைக் கொண்டு இப்படி சிரமப்படுகிறாய்? உன் நோக்கம் உனக்கு மிக உயரியதாக இருக்கலாம். ஆனால் அதனை அடைய நீ காணும் வழி உயர்ந்ததா என்று சற்று யோசிக்க வேண்டும். சில சமயங்களில் சிலர் தம் வழியே நல்லதென நினைத்து செயல்பட்டு தீய விளைவுகளையே பெறுகிறார்கள். இதனை விளக்க உனக்கு உதயபானு என்ற மன்னனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

உதயபுரத்து மன்னன் உதயபானு. அவன் எல்லா சாஸ்திரங்களையும்



Sankar...



கற்றவன். மக்கள் சுகமாக வாழும் விதத்தில் அவனது ஆட்சி இருந்து வந்தது. ஒருமுறை உதயபானு தன் அமைச்சரை அழைத்துக் கொண்டு மாறு வேடத்தில் நகர சோதனைக்குக் கிளம்பினான். ஒரு தெருவில் ஒரு வீட்டிலிருந்து உரத்த குரல்கள் கேட்கவே அவனும் அமைச்சரும் அந்த வீட்டிற்குள் சென்றனர். அந்த வீட்டில் பார்வதி என்ற ஏழு வயதுச் சிறுமிக்கு நான்கு நாட்களாகக் காய்ச்சல். அன்று பண்டிகை நாளென்று கூறி அவளது பெற்றோர்கள் அவளைக் குளிப்பாட்டினார்கள். அதனால் அவளுக்கு கை கால் நரம்புகள் இழுக்கலாயின. வைத்தியர் வந்து பார்த்து விட்டு ''காய்ச்சலில் கிடக்கும் இவளைக் குளிப்பாட்டியது தப்பு'' என்று அவளது பெற்றோர்களிடம் கூறினார்.

அப்போது அவளது தந்தை ''அவளுக்கு ஆயுள் பலம் இருந்தால் தன்னால் பிழைத்துக் கொள்வாள். அப்படி மீறினால் போகட்டும். அதற்காக பண்டிகை நாளன்று குளிக்காமல் ஆசாரத்திலிருந்து தவறி நடப்பதா? இதற்காக எங்களைக் குறை கூறுவதானால் உங்கள் வைத்தியமே என் மகளுக்கு வேண்டியதில்லை. நீங்கள் போகலாம்'' என்று சற்றுக் காரசாரமாகக் கூறினான்.

வைத்தியரும் மறுபேச்சு பேசாமல் சிறுமிக்கு மருந்தைக் கொடுத்துவிட்டு ''நல்லவேளை. இவள் அதிர்ஷ்டம் நல்லது. இனி ஆபத்து ஒன்றும் இல்லை'' என்றார். சிறுமியின் தந்தையோ ''அதிர்ஷ்டத்தால் இவளுக்கு வந்த ஆபத்து போய் விடவில்லை. நாங்கள் ஆசாரம் தவறாமல் நடந்து கொண்டதால்தான் கடவுள் இவளைக் காப்பாற்றி இருக்கிறார்'' என்றான்.

இதை எல்லாம் நேரில் கண்ட உதயபானு தன் அமைச்சரோடு அரண்மனைக்குத் திரும்பும் போது ''அமைச்சரே! நம் நாட்டு மக்களிடம் அறியாமை மிக அதிகமாக இருப்பது போலத் தெரிகிறது. இதைப் போக்க வேண்டியதுதான் நமது முதல் வேலை'' என்றான்.

அமைச்சரும் ''அறியாமையால் நம் மக்கள் மூட நம்பிக்கைகளையும் பழக்க வழக்கங்களையும் கொண்டிருக்கிறார்கள். நாம் இவற்றைத் தடுக்க சட்டங்கள் இயற்ற வேண்டும்'' என்று யோசனை கூறினார். உதயபானுவும் அவ்வாறே சட்டங்கள் இயற்றி அவற்றை அமுலில் கொண்டு வந்தான். ஆனால் அவை மக்களுக்குப்

பிடிக்கவே இல்லை. சம்பிரதாயங்களை மதிக்கக் கூடாதென மன்னன் கட்டளை இடுவதா என்று அவர்கள் கோபம் கொண்டார்கள். அவர்கள் யாவரும் ஒன்று கூடி கஜமுகன் என்பவனைத் தம் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்து மன்னனிடம் தம் எதிர்ப்பை எடுத்துக்கூறுமாறு அனுப்பினார்கள்.

கஜமுகனும் உதயபானுவைக் கண்டு ''அரசே! ஆயிரக்கணக்கான வருடங்களாக கடைப்பிடித்து வரும் ஆசாரங்களையும் பழக்க வழக்கங்களையும் நீங்கள் தவறானவை என்று கூறுகிறீர்கள். இது மக்களைக் கலக்கி விட்டது. இச்சட்டங்களை உடனே நீங்கள் ரத்து செய்யா விட்டால் நாட்டில் பெரும் கலகமே மூண்டு விடும்'' என்றான். அதுகேட்டு உதயபானு கோபம் கொண்டு அவனைச் சிறையில் தள்ள எண்ணினான். ஆனால் அமைச்சர் குறுக்கிட்டு ''அரசே! முட்டாள்களை எதிர்ப்பது வீணே. கஜமுகனை சிறையிலிட்டால் நாம் மக்களின் கோபத்திற்கே ஆளாவோம்'' என அறிவுரை கூறினார்.

மன்னனும் ''அப்படியானால் என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான். அப்போது அமைச்சர் கஜமுகனிடம் ''இந்த சட்டங்களைக் கொஞ்ச காலத்திற்கு நிறுத்தி வைக்கிறோம். நீ நன்றாகப் படித்து விட்டு வா. அப்போது இந்த சட்டங்களெல்லாம் தேவையற்றவை என்று நீ கருதினால் இவற்றை ரத்து செய்கிறேன்'' என்றார்.

கஜமுகனும் அதனை ஏற்று ஐந்து வருட காலம் கல்வி பயின்று பல விஷயங்களைத் தெரிந்து கொண்டு



மன்னனைக் காண வந்தான். உதயபானுவும் ''இப்போது நீ என்ன சொல்லப் போகிறாய்?'' என்று கேட்டான். அவனும் ''சம்பிரதாயம் என்ற பெயரில் நாட்டில் எவ்வளவோ மூட நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும் வந்து விட்டன. இவற்றை எல்லாம் ஒழித்தால்தான் நாடு முன்னேற்றம் அடையும்'' என்றான்.

மன்னனும் ''பேஷ்! நீ எவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டுமோ அவற்றைத் தெரிந்து கொண்டு விட்டாய். இனி என் சட்டங்களை அமல்படுத்த வேண்டியது உன் பொறுப்பு. உனக்கு மாதம் ஆயிரம் வராகன்கள் சம்பளம் கொடுக்கிறேன்'' என்றான்.

அப்போது கஜமுகன் ''மக்கள் பிரதிநிதியான எனக்கு ஆயிரம் வராகன்கள் சம்பளம் என்றால் உங்கள்



வது நியாயமானதே. இதுபற்றி மக்களின் கருத்துக்களை சேகரித்துக் கொண்டு வா. அது நீ கூறுவது போல இருந்தால் மன்னர் சிம்மாசனத்தை உனக்குக் கொடுத்து விட்டு காட்டிற்குத் தவம் செய்யப் போய் விடுவார். ஆனால் இதற்கு முன் ஒரு நிபந்தனை. மக்களெல்லாம் உன்னைப் போல கல்வி அறிவு பெற்ற பிறகே அவர்களின் கருத்துக்களைச் சேகரிக்க வேண்டும்'' என்றார்.

கஜமுகனும் ''மக்கள் யாவரும் கல்வி அறிவு பெற்றிருக்க வேண்டுமென்பது நடக்காத காரியம். அதற்கு நீண்ட காலம் பிடிக்கும். எனவே ஆயிரம் வராகன் மாதச் சம்பளத்தில் இந்த அரசாங்க உத்தியோகத்தை ஏற்கிறேன்'' என்றான்.

அதுகேட்டு மன்னன் ஆச்சரியப்பட்டான். கஜமுகன் அங்கிருந்து சென்ற பின் அவன் அமைச்சரிடம் ''நீங்கள் எப்படி அவனிடம் நான் சிம்மாசனத்தை அவனுக்குக் கொடுப்பதாகக் கூறினீர்கள்?'' என்று கேட்டான். அமைச்சரும் ''மக்கள் கல்வி அறிவு பெறாதவரை முட்டாள்களாகவே இருப்பார்கள். முட்டாள்கள் மூட நம்பிக்கைகளை நம்புவார்கள். அரசவம்சத்தில் பிறந்தவர்களே நாட்டின் அரசனாக வேண்டும் என நினைப்பதும் அவர்களது மூட நம்பிக்கைகளில் ஒன்று. கஜமுகன் என்னதான் விளக்கினாலும் அரச குடும்பத்தில் பிறக்காத அவனை மக்கள் தம் மன்னனாக ஏற்க மாட்டார்கள். இதை நன்கு தெரிந்தே நான் அவனை மன்னனாக்குவதாகக் கூறினேன்'' என்றார். அப்போது மன்னன் ''நம் நாட்டு மக்

மாதச் சம்பளம் எவ்வளவு?'' என்று கேட்டான். அதனால் கோபமடைந்த மன்னன் ''நீயும் நானும் சமமா? எங்கள் வம்சத்தவர்கள் இந்நாட்டின் மன்னர்களாகி வருவதுதானே வழக்கம்?'' என்றான்.

அதுகேட்டு கஜமுகன் புன்னகை புரிந்து ''பிறப்பால்தானே நீங்கள் மன்னரானீர்கள்? இந்தப் பழக்கத்தை மூட நம்பிக்கை என்றுதானே கூற வேண்டும். மூட நம்பிக்கை ஒழிய வேண்டுமென்றால் நீங்கள் மன்னராக இருப்பதும் ஒழிய வேண்டும்'' என்றான். உதயபானு அதற்கு பதில் சொல்ல முடியாமல் திகைத்து அமைச்சரை அழைத்து வர ஒரு வீரனை அனுப்பினான்.

அமைச்சரும் வந்து விஷயத்தைத் தெரிந்து கொண்டு ''கஜமுகா! நீ கூறு

களுக்கு எல்லாம் கல்வி அறிவு அளித்து விட்டால் நாட்டில் மூட நம்பிக்கைகளே இல்லாது போய் விடுமே. அப்போது கஜமுகன் மன்னனாகலாமே. இதற்காக அவன் ஏன் செயல்படவில்லை?'' என்று கேட்டான்.

அமைச்சர் சிரித்தவாறே ''நீங்கள் எல்லா சாஸ்திரங்கள் கற்றவர். என்றாவது நீங்கள் அரச வம்சத்தவர்கள் சிம்மாசனத்தில் அமர்வது மூட நம்பிக்கை என்று எண்ணியது உண்டா?'' என்று கேட்டார். இதைக் கேட்டு உதயபானு திகைத்துப் போனான். அவன் எதுவும் கூறாமல் சிம்மாசனத்திலிருந்து எழுந்து அங்கிருந்து சென்று விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! கஜமுகன் அரசனாக விரும்பாமல் ஏன் அரசாங்க உத்தியோகத்தை ஏற்றான்? மன்னன் உதயபானு ஏன் சிம்மாசனத்திலிருந்து எழுந்து போய்விட்டான்? இக்கேள்விகளுக்கு சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''என்னதான் ஒருவன் படித்திருந்தாலும் அவன் சுய நலத்தையே பார்ப்பவன். உண்மையான கல்வி பெற்றவன் சுயநலம் கொள்ளமாட்டான். படித்த கஜமுகன் மன்னனாக ஆசைப்பட்டான். அந்நாடு அப்படிப்பட்ட கல்வியைத்தான் அளித்து வந்தது. அதே கல்வியை எல்லோருக்கும் அளித்தால் எல்லோருமே மன்னனாக விரும்புவார்கள். இதைத் தடுக்க அரச வம்சத்தவரே அரசனாக வேண்டும் என்ற மூட நம்பிக்கையை நிலைத்திருக்கச் செய்ய வேண்டும். எனவேதான் கஜமுகன் மன்னனாக விரும்பாமல் அரசாங்க உத்தியோகத்தை ஏற்றான். மன்னன் திடீரென்று எழுந்து சென்றது அமைச்சர் கூறிய மூட நம்பிக்கையை புரிந்து கொண்டது தான். அரச வம்சத்தவரே சிம்மாசனத்தில் அமர வேண்டும் என்பதும் ஒரு மூட நம்பிக்கைதானே. அதனால் தான் சிம்மாசனத்தை விட்டு எழுந்து சென்றான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# விதியின் விளையாட்டு

ஒரு சமயம் தொடர்ந்து பெய்த மழையால் குஷஸ்தலி நதி பெருக்கெடுத்தது. இதனால் அக்கம் பக்கத்தில் இருந்த கிராமங்கள் எல்லாம் வெள்ளத்தில் மூழ்கின. முருகேசன் என்ற பண்ணையார் மிகவும் கஷ்டப்பட்டு சேர்த்த செல்வங்களை எல்லாம் இழந்து மிகுந்த வேதனையோடு குடும்பத்தோடு வேறு ஊருக்குச் சென்றார். முருகேசனின் நண்பரான நடேசன் என்பவர் நண்பருக்கு ஆறுதல் சொன்னார். ''எல்லாம் விதியின் விளையாட்டு. செல்வம் வந்து சேரும்போது கூரையைப் பிய்த்துக் கொண்டு கொட்டும். ஆனால் போகும்போது 'யானை விளாம்பழத்தைச் சாப்பிட்டு விட்டு வெறும் ஓடியைப் போடுவது போல்' மொத்தமாக போய்விடும். எனவே விதி ஒரு கையால் நமக்குக் கொடுத்ததை இன்னொரு கையால் நம்மிடமிருந்து பறித்துச் செல்வது ஒன்றும் அதிசயமானது அல்ல''.

முருகேசன் சில நிமிடங்கள் மௌனமாக இருந்துவிட்டு பிறகு சொன்னார். ''நான் 30 வருடங்களாக மிகவும் கஷ்டப்பட்டு உழைத்த சொத்துகளை ஒரே இரவில் வெள்ளம் வந்து அடித்துக் கொண்டு போனதில் நியாயமே இல்லை. நீ சொன்ன அந்த விதியானது இந்த 30 வருடங்களாக எப்படிக் கொஞ்சங் கொஞ்சமாக எனக்கும் கொடுத்ததோ அதே போல கொஞ்சம் கொஞ்சமாக என் சொத்துகளை அபகரித்திருந்தால் நான் இவ்வளவு வேதனைப்பட்டிருக்க மாட்டேன்''

இதைக் கேட்ட நடேசன் பெருமூச்சு விட்டார். இதுவரை தவணை முறை விற்பனை என்று தான் அவர் கேள்விப் பட்டிருக்கிறார். விதி கூட தவணை முறையில்தான் விளையாட வேண்டும் என்றொரு புதிய தகவலை முருகேசனிடமிருந்து கேட்டதில் அவர் கொஞ்சம் குழம்பிப் போயிருந்தார்!





# தங்க சிம்மாசனம்

வெகு காலத்திற்கு முன் விந்திய மலைக்குத் தெற்கே சிறு சிறு நாடுகள் பல இருந்தன. அவற்றுள் காளிந்தி, சம்பகம், குந்தினம், கௌன்டனியம் என்பவை சற்றுப் பெரியவை. இவற்றில் கௌன்டனிய நாட்டின் அரசன் சர்வோத்தமன். அவன் சக்தி வாய்ந்தவன். நல்ல ராஜதந்திரி. இதனால் மற்ற நாடுகளைத் தன் ஆட்சியின் கீழ் கொண்டு வந்து தென் பாரதத்தின் சக்ரவர்த்தி எனவும் பெயர் பெற்று விட்டான்.

இவ்வளவு பரந்த நாட்டை மிக்கத் திறமையுடன் சர்வோத்தமன் பல ஆண்டு காலம் நன்கு ஆண்டு வந்தான். ஆனால் அவனுக்குப் பின் அந்நாட்டை ஆள அவனுக்கு ஒரு ஆண் குழந்தை கூடப் பிறக்கவில்லை. அவனது மரணத்திற்குப் பிறகு அவனது தம்பியின் மகனான கீர்த்தி சிம்மன் மன்னனானான். இவன் மிகவும் நல்லவனாக இருந்தபோதிலும் சர்வோத்தமனைப் போல திறமைசாலி அல்ல. இதனை நன்கு தெரிந்து கொண்டிருந்தவர் அவனது குருவான புலிந்த பட்டர்.

புலிந்த பட்டர் எல்லா சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தவர். மந்திர தந்திரங்கள் நன்கு அறிந்தவர். காசியில் பல ஆண்டுகள் இருந்து எல்லாம் கற்ற பின் சர்வோத்தமனின் கடைசி காலத்தில் அவனது தர்பாரில் சேர்ந்தவர். சர்வோத்தமனும் அவரது புலமையைக் கண்டு வியந்து அவரை மரியாதையுடன் நடத்தி வந்தான். புலிந்தரும் சிறுவனான கீர்த்தி சிம்மனின்



ஒருநாள் கீர்த்தி சிம்மன் சில வீரர் களை உடன் கூட்டிக் கொண்டு வேட்டையாடக் காட்டிற்குச் சென் றான். காட்டில் ஓரிடத்தில் ஒரு மான் துள்ளி ஓடுவதைக் கண்டு அவன் அதற்குக் குறி வைத்து அம்பை எய் தான். அம்பு அதன் மீது படவில்லை. மானும் தப்பி எங்கோ ஓடி விட்டது. அதைக் கண்டு கீர்த்தி சிம்மன் திகைத்து நின்றான். அப்போது அவ னோடு வந்த ஆட்கள் சிரிப்பது அவ னுக்குத் தெரிந்தது. அந்தச் சிரிப்பால் தன்னை அவர்கள் கேலி செய்வதா கக் கீர்த்தி சிம்மன் எண்ணி மிகவும் வருத்தப்பட்டான்.

அவன் சட்டெனக் குதிரை மீதி ருந்து கீழே குதித்து தன்னோடு வந்த ஆட்களை எரித்து விடுவது போலப் பார்த்தான். அவர்களோ மிகவும் பணிவுடன் இருப்பது போல தலை குனிந்து கொண்டு நின்றார்கள். ஆனால் அவர்கள் அவ்வாறு பணி வுடன் நிற்பது வெறும் நடிப்பே என அவனது புண்பட்ட மனம் எண்ணி யது. ஒரு மானைக் குறி வைத்து அடித்து வீழ்த்தக் கையாலாகாத இவனா இந்நாட்டு மன்னனாக இருக்கத் தகுந்தவன் என அவர்கள் மனதில் எண்ணிக் கொண்டிருப்பதாக அவன் நினைத்து விட்டான்.

நற்குணங்களைக் கண்டு அவன் மீது பரிவு கொண்டு தம் சொந்த மகனாக அவனை எண்ணிக் கல்வி புகட்டி வந்தார். கீர்த்தி சிம்மனும் அவரிடம் எல்லா சாஸ்திரங்களையும் முறை யாகக் கற்றான். அவன் மன்னனான மறு ஆண்டில் சர்வோத்தமன் காலத் திலிருந்து வந்த வயோதிகரான ராஜ குரு இறக்கவே மன்னன் கீர்த்தி சிம்ம ன் புலிந்த பட்டரை தன் ராஜகுருவாக நியமித்துக் கொண்டான்.

தன் சீடன் தன்னை இவ்வாறு கௌரவித்ததால் புலிந்த பட்டரும் கீர்த்தி சிம்மனை எப்பாடு பட்டாவது சர்வோத்தமனைப் போல சக்ரவர்த்தி எனப் புகழ் பெறச் செய்ய வேண்டு மெனத் தீர்மானித்தார். ஆனால் எல் லாமே ஒருவர் நினைப்பது போலவா நடந்து விடுகிறது? இல்லையே.

அவன் அவர்களிடம் எதுவும் பேசவில்லை. சட்டெனத் தன் குதிரை மீது ஏறித் தலைநகரை நோக்கிச் செல் லவே, அவனுடன் வந்தவர்களும் திகைத்துப் போய் அவன் பின்னா லேயே சென்றார்கள். கீர்த்தி சிம்மன் அரண்மனையை அடைந்து தன் அறைக்குள் சென்று விட்டான்.

யாரிடமும் எதுவும் பேசவில்லை.

இதற்கு மறுநாள் காலையில் புலிந்த பட்டர் பூஜை செய்து கொண்டிருக்கும் போது ஒரு வீரன் அரண்மனையிலிருந்து வந்து ''மன்னர் திடீரென இறந்து விட்டார்'' எனக் கூறினான். அதுகேட்டு அவர் திகைப்பும் வியப்பும் அடைந்து உடனே எழுந்து அரண்மனைக்கு விரைந்து சென்றார்.



அப்போது மன்னனின் உடலைச் சுற்றி நின்றிருந்த அவனது குடும்பத்தினர் அவன் எக்காரணத்தால் திடீரென இறந்து போனான் என எண்ணி சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்தார்கள். கீர்த்திசிம்மனின் மரணம் எல்லோரையும்விட புலிந்த பட்டருக்கே அதிக மன வேதனையை அளித்தது. அவர் அரண்மனையிலிருந்து தன் வீட்டிற்குத் திரும்பி வந்த போது அரண்மனையில் பணிபுரியும் காவல் வீரன் ஒருவன் அவரிடம் ஒரு சிறு பெட்டியைக் கொடுத்து ''இன்று காலை மன்னர் இதை என்னிடம் கொடுத்து உங்களிடம் கொடுக்கச் சொன்னார். நான் இங்கு வந்தபோது நீங்கள் பூஜை செய்து கொண்டிருந்ததால் சற்று நேரம் கழித்துக் கொடுக்கலாம் என எண்ணிப் போய் விட்டேன்'' என்றான்.

புலிந்த பட்டர் அந்தப் பெட்டியைத் திறந்து பார்த்தார். அதில் ஒரு கடிதம் இருந்தது. அதைப் படித்த பின் அவர் கீர்த்தி சிம்மனின் மனவேதனையும் அதன் காரணமாக மனமுடைந்து தற்கொலை செய்து கொண்டான் என்பதையும் தெரிந்து கொண்டார்.

கீர்த்தி சிம்மன் இறந்ததால் அவனது மூன்று வயது மகனைச் சிம்மாசனத்தில் அமர்த்தி, முதலமைச்சர் அவனுக்கு பதிலாக ஆட்சி புரிந்து வந்தார். ஆனால் முறையான மன்னன் என்பவன் இல்லாததால் நாட்டில் ஆங்காங்கே கலவரங்களும், நாச வேலைகளும் தலை தூக்கலாயின. நாளாக நாளாக அவை அதிகரித்து காளிந்தி, சம்பக, குந்தன நாடுகள் கௌன்டினிய நாட்டின் ஆதிக்கத்தில் இராமல் சுதந்திரம் பெற்றுத் தனிநாடுகளாக ஆகி விட்டன.

கீர்த்தி சிம்மனின் மகன் வளர்ந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றும் அவனால் இழந்த அந்த நாடுகளை மீண்டும் கைப்பற்ற முடியவில்லை. அவனுக்குப் பின் பட்டத்திற்கு வந்த அவனது மகனின் காலத்திலோ வேறு சில நாடுகளும் அவனது ஆட்சியை ஏற்காமல் பிரிந்து போயின. இதனால்



அவன் சக்ரவர்த்தி என அழைக்கப் படாமல் கௌன்டினிய மன்னன் என்றே அழைக்கப்பட்டான்.

இச் சமயத்தில் கௌன்டனிய நாட்டை ஆண்டு கொண்டிருந்தவன் அந்த வம்சத்தில் வந்த பத்தாவது மன்னனான ஸ்ரீதத்தன். அவன் நல்ல வனே. திறமைசாலி. அவனது மனைவி ஒரு ஆண் குழந்தையை பெற்றெடுத்த பின் இறந்து போனாள். ஸ்ரீதத்தன் இன்னொரு பெண்ணை மணக்காமல் தன் மகனை அருமை பெருமையாக வளர்த்து வரலானான். அவன் நல்ல கல்வி பயில வேண்டு மென எண்ணி தென் பாரதத்திலே புகழ்பெற்ற குருவான கிருஷ்ண சந்திர ரிடம் தன் மகன் விஜயதத்தனை ஒப் படைத்தான்.

விஜயதத்தன் கிருஷ்ண சந்திரரின் குருகுல வாசத்தில் எல்லாம் கற்றுக் கொண்டு தன் குருவின் நன்மதிப்பை யும் பெற்றான். போர்க் கலையிலும் இலக்கியத் துறையிலும் அவன் நல்ல தேர்ச்சி பெற்றான். இதைக் கண்டு அந்த குருகுலத்தின் மாணவர்கள் அவனை பாராட்டினார் கள்.

கிருஷ்ண சந்திரர் ஒருநாள் அவனி டம் ''நீ பொதுவாகக் கற்க வேண்டிய தெல்லாம் கற்றுக் கொண்டு விட்டாய். அரசனாகப் போக வேண்டியவன் நீ. அதற்காக சில விஷயங்களை நீ தனி யாகக் கற்க வேண்டும். அவற்றைச் சொல்லிக் கொடுக்க இரண்டு மாதங் களாகும். அது முடிந்து விட்டதும் நீ இங்கு தெரிந்து கொள்ள வேண்டி யதை எல்லாம் தெரிந்து கொண்டு விட்டாய் என்றாகி விடும்'' என்றார்.

விஜயதத்தனும் ''குருவே! தங் களிடம் எல்லா சாஸ்திரங்களையும் கற்றுக் கொண்டதால் என் நாட்டை ஆள தகுதியும் திறமையும் அடைந் திருப்பதாக நினைக்கிறேன். இன்னும் நான் கற்க வேண்டியதை இரண்டு மாதங்களில் கற்பிப்பதாகக் கூறி யுள்ளீர்கள். அவற்றையும் நான் மிக வும் கவனத்துடன் கற்றுக் கொள் வேன்'' என்றான்.

கிருஷ்ண சந்திரரும் ''நீ என் மாண வர்களில் தலை சிறந்தவன். நீ உன் முன்னோர்களில் ஒருவரான சர்வோத் தமசக்கரவர்த்தியைப் போலப் புகழ் பெற்று பரந்த சாம்ராஜ்ஜியத்தை ஆண்டு பேரும் புகழும் பெற்று பெரு வாழ்வு வாழ்வாயாக'' என்று வாழ்த் தினார்.

இதற்கு மறுநாளே மன்னன் ஸ்ரீ தத்தன் அனுப்பிய வீரன் ஒருவன்

கிருஷ்ண சந்திரரின் குருகுலத்திற்கு வந்து அவரிடம் ''மன்னர் இளவரசரை உடனே அழைத்து வரச் சொன்னார்'' எனக் கூறி மன்னன் கிருஷ்ண சந்திரருக்கு எழுதிய கடிதத்தையும் கொடுத்தான். அதிலும் இளவரசனை உடனே அனுப்பி வைக்குமாறு வேண்டப்பட்டிருந்ததேயன்றி அதற்கான காரணம் எதுவும் குறிப்பிடப்படவில்லை.

கிருஷ்ண சந்திரரும் விஜய தத்தனைக் கூப்பிட்டு விஷயத்தைக் கூறி ''ஆட்சி என்றாலே எந்த நிமிடம் என்ன நடக்கும் என்று கூற முடியாது. ஏதாவது புதிதாக உன் தந்தைக்குப் பிரச்னை ஏற்பட்டிருக்கலாம். எனவே தான் உன்னை உடனே வருமாறு அழைத்திருக்க வேண்டும். நீ தாமதிக்காமல் இப்போதே கிளம்பு'' என்றார்.

விஜயவர்மனும் குருவை வணங்கி அவரது ஆசிகளைப் பெற்றுக் கொண்டு தன் குதிரை மீதேறி கிளம்பிச் சென்றான்.

அரண்மனையில் தன் மகனுடைய வரவை எதிர்பார்த்து ஸ்ரீதத்தன் நின்று கொண்டிருந்தான். விஜய தத்தன் வந்ததும் மன்னன் அவனைக் கட்டித் தழுவிக் கொண்டு அழைத்துச் சென்றான். தன் தந்தை ஏனோ கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறார் என்பதை விஜய தத்தன் ஊகித்து விட்டான்.

அவன் தன் தந்தையிடம் ''தந்தையே! தாங்கள் மிகவும் கவலைப் பட்டுக் கொண்டிருப்பது தெரிகிறது. அப்படி என்ன பிரச்சினை வந்து விட்டது? என்னை உடனேயே கிளம்பி வரும்படிச் சொன்னதற்கு என்ன காரணம்'' என்று படபடப்புடன் கேட்டான். ஸ்ரீதத்தனும் ''மகனே! நீ வந்து சேர்ந்ததாலே பாதிப் பிரச்சினை தீர்ந்து விட்டது. எல்லாவற்றையும் சாவகாசமாகச் சொல்கிறேன். முதலில் நீ குளித்து விட்டு சாப்பிட வா'' என்றான். விஜயதத்தனும் குளித்து விட்டு





வந்து சாப்பிட்டான்.

சாப்பாடானதும் அவன் தன் தந்தை யிடம் ''தந்தையே! என்னை அவசர மாக வரச் சொன்ன காரணம் என்ன?'' என்று கேட்டான். ஸ்ரீதத்தனும் நிதான மாக ''காரணத்தோடுதான் உன்னை அழைத்து வரச் சொன்னேன் விஜயா! நம் முன்னோர்களில் ஒருவரான சர் வோத்தம சக்ரவர்த்தி பல நாடுகளை வென்று தன் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வந்தவர் என்பதை நீ அறி வாய். அவருக்கு சிற்றரசர்கள் கப்ப மாக பொன்னும், நவரத்தினங்களும், பல அபூர்வப் பொருள்களும் கொடுத் தார்கள். அவை பற்றிய விவரங்கள் நம் வம்ச மன்னர்கள் எல்லோருக்கும் தெரியும். சர்வோத்தமரின் சாம்ராஜ் யம் பிற்காலத்தில் சிறு நாடுகளாகப் பிரிந்து சுதந்திரம் அடைந்தன. ஆனால் அவற்றில் ஒன்று கூட இதுவரை நம் நாட்டின் மீது படை எடுக்க முயல வில்லை. அதனால் நம் முன்னோர்கள் சேகரித்து வைத்த யாவும் பத்திரமா கவே உள்ளன. ஆனால் இப்போது அவற்றின் மீது பிறர் கண் பட்டு விட்டது'' என்றான்.

விஜய தத்தன் ''அவன் யார்?'' என்று கேட்கவே, ஸ்ரீதத்தனும் ''ஒரு வரல்ல. நம் நாட்டின் மீது படை எடுத்து வர சில நாடுகள் இப்போது சதி செய்கின்றன'' என்றான். அது கேட்டு விஜயதத்தன் திடுக்கிட்டு ''பிற நாடுகள் சதி செய்கின்றனவா? ஆச் சரியமாக இருக்கிறதே. நாம் நம் அண்டை நாட்டவர்களிடம் பகைமை கொள்ளாமல் நட்புறவு கொண்டு தானே இருக்கிறோம். சம்பகம், குந் தினம், காளிந்தி ஆகிய மூன்று நாடு களும் சேர்ந்து சதி செய்கின்றனவா? என்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லையே. காளிந்தி மன்னர் கூட இச்சதியில் சேர்ந்திருக்கிறாரா?'' என்று கேட்டான். ''ஆம்'' எனக் கூறி னான் ஸ்ரீ தத்தன்.

விஜய தத்தன் அதைக் கேட்டு மலைத்துப் போனான். அப்போது அவனுக்குத் தன் தந்தையின் கவலைக் கான காரணம் தெரிந்து விட்டது. சர்வோத்தம மன்னனுக்குப் பின் கௌன்டனிய மன்னர்களால் சாம் ராஜ்யத்தை நிலைத்து வைத்திருக்க முடியவில்லை. அது பல சிறு நாடு களாகப் பிரிந்தது. ஆயினும் கௌன்ட னிய நாடு வேறு எந்த நாட்டிடமும் பகைமை காட்டவில்லை. ஸ்ரீதத்த னின் தந்தை தன் மகள் சுமதிக்கு சுயம் வரத்திற்கான ஏற்பாட்டைச் செய்து

எல்லா மன்னர்களுக்கும் அழைப்பு விடுத்தார். அதில் சுமதி அண்டை நாடான காளிந்தி மன்னனின் கழுத்தில் மாலையிட்டாள். ஸ்ரீதத்தனின் தந்தை மகிழ்ந்து போய் சுமதியை காளிந்தி மன்னனுக்கு மணமுடித்து வைத்தார்.

இவ்வாறாக ஸ்ரீதத்தனின் சகோதரியின் கணவனாகக் காளிந்தி மன்னன் ஆகி விட்டான். இரு நாடுகளிடையே எல்லாத் துறைகளிலும் நெருங்கிய தொடர்புகள் ஏற்பட்டன. தன் மகள் ஸ்ரீலேகாவை விஜய தத்தனுக்கு மணமுடித்து விட வேண்டுமென காளிந்தி ராணி சுமதி விரும்பினாள். இதை ஸ்ரீதத்தனும் மகிழ்ச்சியுடன் வரவேற்றான். காளிந்தி மன்னன் மாதவ சேனனும் இதற்கு எதிர்ப்பு தெரிவிக்கவில்லை. இப்படிப்பட்ட மாதவ சேனனா கௌன்டனிய நாட்டிற்கு எதிரான சதியில் சேர்ந்திருக்கிறான்.

விஜய தத்தன் பெருத்த யோசனையில் ஆழ்ந்து விட்டதைக் கண்ட ஸ்ரீதத்தன் அவனது தோளில் மெதுவாகத் தட்டவே அவனும் ''தந்தையே! மூன்று நாடுகளுமே சேர்ந்தா சதி செய்கின்றன? இதுபற்றி நம் ஒற்றர்கள் என்ன தெரிவித்திருக்கிறார்கள்? நம் நாட்டின் மீது படை எடுக்கப் போகிறார்களா அல்லது கலகத்தையும் குழப்பத்தையும் விளைவிக்கப் போகிறார்களா? ஏதாவது விவரங்கள் தெரிந்ததா?'' எனக் கேட்டான். ஸ்ரீதத்தனும் ''நம் சேனாதிபதி வீரபாகு சில ஒற்றர்களை அனுப்பி தகவல் சேகரித்துள்ளான். ஒற்றர் தலைவன் அளித்துள்ள அறிக்கையைப் படித்தால் என் தலையே சுற்றுகிறது'' என்றான்.



''அப்படி அதில் என்ன இருக்கிறது?'' என்று விஜய தத்தன் கேட்கவே ஸ்ரீதத்தனும் ''அதுபற்றிப் பிறகு பேசலாம். அதற்குமுன் நீ சில விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும். கூறுகிறேன் கேள்'' என்று கூறிச் சொல்ல ஆரம்பித்தான்.

தென் பாரதத்தில் முக்கிய நாடுகளில் சம்பக நாடும் ஒன்று. அதன் மன்னன் மராள பூபதி. இவனது தந்தை சக்கர பூபதி தன் அண்ணனையே கொன்று விட்டு சிம்மாசனத்தைக் கைப்பற்றியவன். இந்த மகா பாவி சூதும் வாதும் நிறைந்தவன். இவனைப் போலவே இவன் மகன் மராள பூபதியும் கொடியவன். இவனுக்கு இரு புதல்வர்கள். இவன் தன் மூத்த மகனுக்குத் தன் தந்தையின் பெயரையே வைத்தான். இந்தச் சக்கர

பூபதியும் தன் தாத்தாவைப் போலவே சூதும் வாதும் நிறைந்தவன். மராள பூபதியும் சக்கர பூபதியும் சூழ்ச்சி செய்வதிலும் போர் புரிவதிலும் வல்லவர்களே. பணம் சேர்த்து சக்ரவர்த்தியாகி விட வேண்டுமென ஆசைப்பட்டுக் கொண்டிருப்பவர்கள்!

சம்பக நாட்டின் வலப்புறம் கிழக்கில் குந்தன நாடும் இடதுபுறமாய் மேற்கே காளிந்தி நாடும் உள்ளன என்பதை நீ அறிவாய். குந்தன நாட்டு மன்னன் ரிஷபத்துவஜன் முதுமை அடைந்து விட்டான். அவனுக்குப் பிறகு சிம்மாசனத்தின் வாரிசுதாரர் யாரும் இல்லை. அவனால் எதுவும் செய்ய முடியாததால் மராள, சக்கர பூபதிகள் அவனைத் தம் கைக்குள் போட்டுக் கொண்டு விட்டார்கள். அந்தக் கொடியவர்களான தந்தையும் மகனும் நம் நாட்டின் மீது ஒரு கண் வைத்திருக்கிறார்கள். ஆனால் இப்போது நம்மைத் தாக்காமல் காளிந்தி நாட்டின் பக்கம் தம் கவனத்தை செலுத்தி இருக்கிறார்கள். சக்கரபூபதி ஸ்ரீலேகாவை மணக்க விரும்புகிறானாம்.

இவ்வாறு கூறி ஸ்ரீதத்தன் நிறுத்தியதும் விஜய தத்தனின் மனதில் எண்ண அலைகள் மோதலாயின. அதுவரை ஸ்ரீலேகாவிற்கும் தனக்கும் எவ்வித இடைஞ்சலும் இல்லாமல் திருமணம் நடந்து விடும் என்று எண்ணி வந்த விஜய தத்தனுக்கு இது பெரும் அதிர்ச்சி யைத் தந்தது. இளம் பிராயத்தி லிருந்தே ஸ்ரீலேகாவும் விஜய தத்த னும் ஒருவரையொருவர் நேசித்து வந்தார்கள். இப்போது இந்த அரசியல் சூதாட்டத்தில் தனக்கு இழப்பு ஏற் பட்டு விடுமோ என்று விஜய தத்தன் எண்ணிக் கவலைப்படலானான். இப் போது அவனுக்கு ஒரு பிரச்சினையாக உருவெடுத்துள்ளது. காளிந்தி மன்னனின் மனதையும் மாற்றி மராள பூபதி ஸ்ரீலேகாவைத் தன் மகன் சக்கர பூபதிக்கு மணம் செய்து வைக்க முயன்றாலும் முயலலாம்.

ஸ்ரீதத்தனும் விஜய தத்தனும் சிறிது நேரம் வரை பேசாமல் இருந்தார்கள். அந்த மௌனத்தைக் கலைத்தவாறே விஜய தத்தன் ''இன்னமும் சொல்ல வேண்டியது ஏதாவது இருக்கிறதா? தந்தையே!'' என்று கேட்டான்.

**(தொடரும்)**



# முதலாவது சுதந்திரப்போர்



**நம் நாட்டில் சுதந்திரப் போராட்டத்தின் தீப்பொறிகள் ஆங்காங்கு தெறித்தன. புரட்சிக்காரர்களின் தலைவர்கள் ஜான்சிராணி லட்சுமிபாயும் நானாசாகேப்பும் ஆயினர். ஜான்சி மன்னர் இறந்ததும் அந்நாட்டைத்தன் வசப்படுத்திக் கொள்ள கிழக்கிந்தியக் கம்பெனி முயன்றது. ஆனால் ராணிலட்சுமிபாய் அதனை எதிர்த்துப் போராடினார். ஆனால் ஜான்சிக் கோட்டையைக் காக்க முடியாது போகவே தன் சுவீகாரக் குழந்தையுடன் குதிரை மீது அமர்ந்து அவர் கோட்டையிலிருந்து வெளியேறினார். அதன் பிறகு -**

லட்சுமிபாய் தன் நம்பிக்கைக்குப் பாத்திரமான மந்தரும், காசியும் இருபுறம் குதிரைகளில் வர தன் வீரர்களைத் தனக்குப் பின் வரச் சொல்லி வேகமாகத் தன் குதிரையை ஓட்டிச் சென்றாள். எங்கும் நிற்காமல் ஒருநாள் பயணம் செய்து மறுநாள் நள்ளிரவின் போது கால்பி அரண்மனையை அடைந்தாள்.

அரண்மனை வாசலில் தீவட்டிகளை ஏந்திக் காவல் புரிந்து கொண்டிருந்த காவலாளிகள் ராணியைக் கண்டதும் ''ராணியார் வந்து விட்டார்'' என்று குரல் கொடுத்தவாறே அரண்மனைக்குள் சென்றார்கள். அது கேட்டு நானாசாகேப்பின் சகோதரர் ராவ் சாகேப் வந்து லட்சுமிபாயை அன்புடன் வரவேற்றார். ராணியும் குதிரை மீதிருந்து கீழே இறங்கவே சில தாதிகள் ஓடிவந்து அவளிட மிருந்து குழந்தையை வாங்கிக் கொண்டார்கள். சில வீரர்கள் அவளது குதிரையை லாயத்திற்குக் கொண்டு போக முயன்றார்கள்.

ஆனால் அக்குதிரை நீண்டநேரப்



பயணத்தின் காரணமாகக் களைத்து விட்டதால் கீழே விழுந்து இறந்து விட்டது. தன் அருமைக் குதிரை இறந்தது கண்டு லட்சுமிபாய் கண்ணீர் வடித்தவாறே கலங்கி நின்றார். பின்னர் மனதைத் தேற்றிக் கொண்டு மேற்கொண்டு செய்ய வேண்டியது பற்றி யோசிக்க அவள் ராவ் சாகிப்புடன் உள்ளே சென்றாள்.

ராணி கால்பி சேர்வதற்கு ஒருநாள் முன்னர் ஆங்கிலேயர் படை ஜான்சியில் புரிந்த அட்டுழியங் களையும் அப்படைத் தலைவன் சர்ஹ்யூரோஜ் தலைமையில் பாதிப்படை கால்பி நோக்கி வரப் போகும் விஷயத் தையும் ராணியின் ஒற்றர்கள் நானாசாகேப்பிற்குத் தெரிவித்தனர். அதன் காரணமாய் நான்கு அரசர்கள் மற்றும் சில ஜமீன்தாரர்கள் அனுப்பிய வீரர் களோடு தம் படைவீரர்களையும் ராவ் சாகேப்பும் தாந்தியா தோபியும் ஓரிடத்தில் ஒன்று சேர்த்தார்கள். இந்தப்படைக்குத் தலைமை தாங்கியது தாந்தியாதோபியே.

இந்தப்படை துந்துகாம் அருகே ஆங்கிலேயரின் படையை எதிர்த்தது. இச்சமயத்தில் தாந்தியாதோபியால் நன்குப் பயிற்சி பெற்ற தன் வீரர்களை முன்நிறுத்தித் தாக்குதலை நடத்த முடியாமல் போயிற்று. அதனால் சிலமணி நேரப் போராட்டத் திற்குப் பின் அவனது படை பின்வாங்க வேண்டியதாயிற்று. ஹ்யூ ரோஜின் வீரர்கள் உற்சாகத்துடன் முன்னேறி கால்பி நகரைக் கைப்பற்றினார்கள். ஆனால் அவர்களால் லட்சுமி பாயையோ, தாந்தியாதோபியை யோ பிடிக்க முடியவில்லை. அவர்கள் தம் வீரர்களை அழைத்துக் கொண்டு கால்பியிலிருந்து குவாலியருக்குச் சென்றார்கள்.

குவாலியர் மன்னன் சிந்தியா ஆங்கிலேயருடன் சேர்ந்து விட்டபோதிலும் குவாலியரின் பிரமுகர்களும் பொதுமக்களும் புரட்சிக்காரர்களை மதித்துத் தம் ஆதரவையும் தெரிவித்து வந்தார்கள். தாந்தியாதோபியும் ஜான்சி ராணி லட்சுமிபாயும் குவாலியருக்குத் தம் வீரர்களுடன் வந்து கொண்டிருக்கிறார்கள் என்ற செய்தியைக் கேட்டதுமே மன்னன் சிந்தியா பயந்து அங்கிருந்து ஓடிப்

போய்விட்டான். லட்சுமி பாயையும் அவளது படை வீரர்களையும் குவாலியர் மக்கள் குதூகலத்துடன் வரவேற்றார்கள்.

இந்த திடீர்த் திருப்பத்தைத் தனக்கு பெருத்த அவமானமாக ஹ்யூரோஜி எண்ணினான். குவாலியரை மீட்டு சிந்தியாவிடம் ஒப்படைக்காது போனால் மற்ற மன்னர்களும் கிழக்கிந்தியக் கம்பெனி கையாலாகாதது என்றும் அதனால் தங்களை எதுவும் செய்ய முடியாது என்றும் எண்ணி லட்சுமிபாய் சென்ற வழியிலே போய் விடுவார்களே என்று ஹ்யூரோஜ் பயப்பட்டான். ஜான்சி தனது முழுக்கட்டுப்பாட்டில் இருந்ததால் அங்கு பெரும் படையை வைத்திருக்க வேண்டிய அவசியமில்லை என எண்ணி அவன் தன் படையில் பாதியுடன் குவாலியரை நோக்கிச் சென்றான்.

அவன் அப்படைக்கு முன்புறம் குவாலியர் மன்னன் சிந்தியாவைப் போகச் செய்தான். இந்த ஏற்பாடு ஆங்கிலப் படைக்கு மிகவும் சாதகமாக அமைந்தது.

குவாலியர் மக்கள் அன்னிய நாட்டவர் தம்மை ஆளக் கூடாது என எண்ணி புரட்சிக்காரர்களுக்கு ஆதரவு அளித்தபோதிலும் தம் நாட்டை நீண்ட காலமாக ஆண்டு வந்து கொண்டிருக்கும் சிந்தியா வம்சத்தவர் மீது அபிமானம் வைத்து மரியாதை காட்டிவருபவர்கள். எனவே ஒரு படைக்கு ராஜ



குடும்பத்தைச் சேர்ந்த சிந்தியா தலைமை தாங்கி வருவது கண்டு அவனை எதிர்த்துப் போராட முடியாது தயங்கி நின்றார்கள்.

இது கண்டு ராணி லட்சுமி பாய் சற்றும் மனம் தளராமல் துணிவுடன் ஆங்கிலப்படையை எதிர்த்துப் போரிட்டாள். அவள் அமர்ந்திருந்த குதிரை புதிதானது. அது அவளது கட்டுப்பாட்டிற்கு அடங்க வில்லை. ஆங்கிலப் படைக்குத் தலைமை தாங்கிய ஹ்யூரோஜ் நன்குப் பயிற்சிபெற்ற போர் வீரன். அவனது படை வீரர்களும் நன்கு பயிற்சி பெற்றவர்களே. இப்படிப் பட்ட பலம் பொருந்திய படையை இருபது வயதுகூட நிரம்பாத ராணி லட்சுமிபாய் மிகவும் துணிவுடன் எதிர்த்தாள். இதற்குக் காரணம் அவளுக்கு இருந்த நாட்டுப் பற்றேயாகும்.



அவளது படை வீரர்கள் துணிச்சலானவர்களே. முழுஈடு பாட்டுடன் போர் புரிபவர்களே. ஆனால் முறையாக ராணுவ வீரர்களுக்கான பயிற்சி பெற்றவர் களல்ல. தேச பக்தியின் காரணமாக உற்சாகத்துடன் லட்சுமிபாயின் படையில் சேர்ந்தவர்கள்.

அதனால் முறையாகப் பயிற்சி பெற்ற ஆங்கிலப்படை வீரர்களை எதிர்த்துப் போராட முடியாமல் அவர்கள் வீழ்ந்தனர். உச்சிவேளை யின் போது ராணியின் படை மிகவும் குறைந்து போய்விட்டது. சில படைத் தலைவர்களும் ராணியிடம் "மகாராணியாரே! இந்த நிலையில் நீங்கள் தொடர்ந்து போரிட்டுக் கொண்டிருப்பது உங்களுக்கு நல்லதல்ல. நாட்டு மக்களுக்கு உங்களது உயிர் மிகவும் உயர்ந்தது. நீங்கள் உயிர் வாழ்ந்தாலே போராட் டத்தைத் தொடர்ந்து நடத்த முடியும். அதனால் நீங்கள் இப்போதே பத்திரமான ஓரிடத் திற்குப் போய்விட வேண்டும்" என்று வேண்டினார்கள்.

ராணியும் அவர்கள் கூறுவதில் உண்மை இருப்பது கண்டு தன் நம்பிக்கைக்குப் பாத்திரமான மந்தருடனும் காசியுடனும் சில வீரர்களைத் துணை கொண்டு போர்க்களத்திலிருந்து கிளம்பிச் சென்றாள். ராணி போர்க்களத்திலி ருந்து போனது கண்டு ஆங்கிலப் படை வீரர்கள் அவளைப் பின் தொடர்ந்து துரத்தலானார்கள்.

ராணி ஒரு குறுகிய பாதை வழியே சென்றாள். ஆங்கிலப்படை வீரர்கள் அவள் எங்கு சென்றாள் என்பது தெரியாமல் நாலா பக்கத்திலும் தேடலானார்கள். ராணி சென்ற பாதை அவளை ஒரு கால்வாய்க்குக் கொண்டு சேர்த்தது. ஓடும் நீரின் சலசலப்பைக் கேட்டு ராணியின் குதிரை மிரண்டு முன்னும் போகாமல் பின்னுக்கும்

செல்லாமல் கட்டுக்கும் அடங்காமல் துள்ளியது.

இச்சமயத்தில் அங்கு வந்த சில ஆங்கிலப்படை வீரர்கள் துப்பாக்கியால் சுடவே ஒரு குண்டு ராணியுடன் சென்ற மந்தரின் உடலில் பாய்ந்தது. அவள் ஆவென அலறவே ராணி உடனே திரும்பி துப்பாக்கியால் மந்தரைச் சுட்ட வீரனின் தலைக்குக் குறிவைத்து கத்தியை வீச அவனது தலை உடலிலிருந்து வேறாகித் தரையில் விழுந்து உருண்டது.

ராணி காயப்பட்ட மந்தரைத் தூக்கும் போது ஒரு ஆங்கிலப்படை வீரன் எறிந்த கத்தி அவளது தலையைத் தாக்கியது. அதனால் ஏற்பட்ட காயத்திலிருந்து ரத்தம் குபு குபு வென்று வந்தது. இதற்குள் ராணியின் வீரர்கள் அந்த ஆங்கிலப் படை வீரனைத் தாக்கி அவனது தலையை வெட்டி எறிந்தார்கள்.

ராணியின் நிலைகண்டு அவளை அவளது மெய்க் காவலாளிகள் அருகிலிருந்த ஒரு குடிசைக்குள் கொண்டு போனார்கள். அப்போது அவள் ''என் அருமை வீரர்களே என் உயிர் போனபின் என் உடலை உடனே எரித்து விடுங்கள் . என் உடலைக் கூட அந்தக் கயவர்கள் பார்த்து விடக்கூடாது என்று கூறியவாறே இறந்தாள். வீரர்களும் அப்பகுதியில் கிடந்த கட்டை, சுள்ளி முதலியவற்றை எடுத்து வந்து அவளது உடலுக்கு தகனக் கிரியைகளை நடத்தினார்கள்.

துணிவுடன் சுதந்திரத்திற்காகப் போராடிய ஜான்சிராணி லட்சுமி பாயின் வாழ்க்கை முடிவுற்றது. அவளது வரலாறு மகத்தானது. உலகவரலாற்றில் ஜோன் ஆப் ஆர்கை அவளுக்கு இணையாகக் கூறலாம்.

ஆங்கில ஆட்சியிலிருந்து விடுபட நடந்த முதலாவது சுதந்திரப்போர் இதுவே.





# பணத்தால்தான் பணம்

ஒரு அரசனின் அரண்மனை முன் தினமும் ஒரு சாது நின்று ''எனக்கு மூளை உள்ளது. ஆனால் அதைப் பயன்படுத்திக் கொள்ள யாரும் முன் வரவில்லை. என்னால் அதைப் பயன் படுத்திக் கொள்ள முடியவில்லையே. என்ன செய்வேன்'' என்று உரக்கக் கூவி வந்தார்.

இதைக் கவனித்த அரசன் ஒருநாள் அந்த சாதுவை அழைத்து ''நீங்கள் தினமும் இவ்வாறு கூறுகிறீர்களே. இதன் பொருளென்ன?'' என்று கேட்டான். அவரும் ''அரசனே! பொறுமையாக இருந்து என்னை நம்பி எனக்குத் தேவைப்படும் பணத்தை நீ கொடுத்தால் உன் பொக்கிஷத்தை நான் நிரப்புகிறேன். நான் பெற்ற பணத்தைப் போலப் பன்மடங்கு உனக்குக் கிடைக்கும்'' என்றார்.

சாதுவுக்குக் கொஞ்சம் பணம் தர அரசன் சம்மதித்தான். ஆனால் அவனது அமைச்சர் குறுக்கிட்டு ''இதில் ஏதோ சூது உள்ளது. இவன் கபட சன்னியாசியாக இருக்கலாம். நம்பாதீர்கள்'' என்று எச்சரித்தான். ஆனால் அரசன் சாது கேட்ட பணத்தைக் கொடுத்து அனுப்பினான். ஒரு வருடத்திற்குப் பின் அதே சாது அரசனைக் கண்டு மேலும் பணம் வேண்டும் என்று கேட்டான். அமைச்சர் தடுத்தும் அரசன் அம்முறையும் சாது கேட்ட பணத்தைக் கொடுத்து அனுப்பினான். மேலும் ஒரு வருடம் கழிந்தது. அப்போது அதே சாது அரசனிடம் சென்று மேலும் பணம் வேண்டும் என்று கேட்டார். அமைச்சர் தடுத்தும் அம்முறையும் அரசன் சாது கேட்ட பணத்தைக் கொடுத்து அனுப்பினான். மேலும் ஒரு வருடம் கழிந்தது. சாது அரசனை காண வந்தார்.

அரசனும் அவரிடம் ''இன்னமும் பணம் வேண்டுமா?'' என்று கேட்டான். அவரோ ''வேண்டாம். இவ்வளவு பொறுமையாக இருந்ததைப்

—எஸ். சோபினி—

பாராட்டுகிறேன். இப்போது நீயும் உன் அமைச்சனும் என்னுடன் வர வேண்டும்'' என்றார். அரசன் சாது வுடன்செல்லத்தயாரானான். அப்போ தும் அமைச்சன் ''இந்த சாது நம்மை எதற்கு எங்கு அழைத்துச் செல்லப் போகிறார் என்பது நமக்குத் தெரி யாது. ஒருவேளை ஏதாவது ஆபத் தில் அகப்பட்டுக் கொள்வோமோ என்னவோ?'' என்றான்.

அரசனும் ''நான் இவரை நம்புவ தாயும் பொறுமையுடன் இருப்பதா யும் வாக்களித்தேன். நம்மை நாமே காப்பாற்றிக் கொள்ளவும் முடியும். பயப்பட வேண்டாம்'' என்றான். அப் போது சாது ''உன் அமைச்சன் பயப் படுவதால் இரண்டு மெய்க்காவலாளி களை வேண்டுமானால் கூட அழைத்து வா'' என்றார்.

அரசனோ ''வேண்டாம். நாம் போகலாம்'' என்றான். அமைச்சனும் அரசனுடன் கிளம்பினான். தங்களைப் பின்தொடருமாறு அவன் சில மெய்க் காவலாளிகளுக்கு ரகசிய உத்தரவு போட்டான். சாது அரசனையும் அமைச்சனையும் நகருக்கு வெளியே அழைத்துப் போய் காடு மலைகளைக் கடந்து கடற்கரைக்கு அழைத்துச்சென் றார். அங்கு ஒரு சிறு படகு தயாராக இருந்தது. அதில் அவர்கள் மூவரோடு இரு படகோட்டிகள் மட்டுமே செல்ல முடியும். அவர்கள் மூவரும் படகில் ஏறிக்கொள்ள இரு படகோட்டிகள் வந்து அதில் ஏறி அதைச் செலுத்திக் கொண்டு தொலை தூரத்திலுள்ள ஒரு தீவை அடைந்தார்கள்.

அது சிறிய தீவு. அதில் எங்கு பார்த் தாலும் சாம்பலே பரவி இருந்தது. நடு



வில் போக ஒரு சிறு வழி மட்டுமே இருந்தது. சாது அரசனையும் அமைச் சனையும் அந்த வழியில் அழைத்துச் சென்றார். அத்தீவில் கொக்குகள் பறந்து வந்து உட்கார்வதை அவர்கள் கவனித்தார்கள். சாது அரசனையும் அமைச்சனையும் அழைத்துப் போய் ஓரிடத்தில் அங்கிருந்த ஒரு இரும்புக் கதவைத் திறந்தார். அங்கு பூமிக்கு அடியில் செல்ல படிகள் இருந்தன.

சாது அரசனிடம் ''நீ இதன் வழியே சென்று கீழே என்ன உள்ளது என்று பார்த்து விட்டு வா'' என்றார். அரசன் போய்விட்டுத் திரும்பி வரும் வரை அமைச்சன் சாதுவை கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நின்றான். அரசன் திரும்பி வந்ததும் சாது அமைச்சனிடம் கீழே இறங்கிப் போய் பார்த்து வரும் படி கூறினான். அமைச்சனும் அப்படி

களில் இறங்கிப் போய்விட்டு திரும்பி வந்து சாதுவின் கால்களில் விழுந்து வணங்கித் தன்னை மன்னிக்கும்படி வேண்டினான்.

அப்போது சாது ''நான் மாணிக்க வேலன் என்னும் வியாபாரி. நான் அயல் நாட்டு வியாபாரம் செய்ய பயணம் செய்கையில் இத்தீவைப் பற்றிய ரகசியத்தைத் தெரிந்து கொண்டேன். இங்கு பாறைகளும் அவற்றிடையே இடுக்குகள் உள்ளதையும் கவனித்தேன். கடல் அலைகள் முத்துச் சிப்பிகளை அடித்து வந்து இப்பாறைகளின் மீதும் அவற்றின் இடுக்குகளிலும் சேர்த்து விடும். கொக்குகள் சிப்பியிலுள்ள மாமிசத்தைக் கொத்தித் தின்றுவிட்டு முத்தை விட்டு விடும். நான் அந்தச் சிப்பிகளிலுள்ள முத்துக்களை எடுத்துச் சேகரித்து பூமிக்குள் ஒரு அறையில் பத்திரமாக வைத்தேன். உன்னிடம் கேட்டு வாங்கிய பணத்தால்தான் பாதாள அறையையும் படிக்கட்டுகளையும் கட்ட முடிந்தது. இதையெல்லாம் ரகசியமாகவே செய்ய வேண்டி இருந்ததால் இதுபற்றி உன்னிடம் ஆரம்பத்திலும் இது வரையிலும் தெரிவிக்கவில்லை. எனக்கு இந்த முத்துக்கள் எதற்கு? நாட்டிற்குப் பயன்படட்டும் என்று தான் உன்னை இங்கு அழைத்து வந்தேன். இவற்றை எடுத்துப் போய் உன் பொக்கிஷத்தை நிரப்பிக் கொள். இவ்வளவு நாட்கள் வரை இது எனக்கு ஒரு பாரமாக இருந்தது. அதை இறக்கி உன்னிடம் கொடுத்து விட்டேன். இனி நான் காட்டிற்குப் போய் நிம்மதியாகத் தவம் செய்வேன். நீயும் உன் மக்களும் சுகமாக இருங்கள்'' என வாழ்த்தி விட்டுச் சென்றார்.

மன்னனும் அமைச்சனும் ''ஆகா! உண்மையிலே இவர் ஒரு மகான். நாட்டின் நலனுக்காக இவர் இவ்வளவும் சேர்த்து நமக்குக் கொடுத்துள்ளார். இவர் நம் பணத்தைக் கொண்டே பணத்தைப் பெருக்கி நமக்குக் கொடுத்துள்ளார். இவர் மீது நான் நம்பிக்கை வைத்தது வீண் போகவில்லை'' என்றான்.

அமைச்சனும் ''நான் கூட முதலில் இவரைச் சந்தேகித்தேன். அது எவ்வளவு தவறு என்பது இங்கு வந்த பின்புதான் தெரிந்தது. உங்களது நம்பிக்கை வீண் போகவில்லை'' என்றான்



**காவேரிக்கரையோரமாய்...3**

# திப்புவின் நாட்டில்

கருத்து: **ஜெயந்தி மகாலிங்கம்**
ஓவியர்: **கௌதம் சென்**




கிருஷ்ணராஜ சாகரத்திலிருந்து சுமார் 37 கி.மீ தொலைவில் தென் கிழக்கில் ஓடும் காவேரி இரண்டா கப் பிளந்து பாய்கிறது. இதனால் ஏற்பட்ட மூன்று தீவு களில் முதலாவது தீவான ஸ்ரீரங்கப்பட்டணம் 5 கி.மீ நீளமும் 2 கி.மீ அகலமும் ஆனது. இம் மூன்று தீவு களிலுமே ரங்கநாத சுவாமி ஆலயங்கள் உள்ளன.ஸ்ரீரங்கப்பட்டணம் ஆலயம்தான் இவற்றில் முதலில் கட்டப்பட்டது. எனவே இங்குள்ள ரங்கநாதரை ஆதிரங்கர் எனக் கூறுகிறார்கள்.

இத்தீவு முக்கிய மைய இடத்தில் இருப்பதால் 18ஆவது நூற்றாண்டில் ஹைதர் அலியும் பின் திப்பு சுல்தானும் இதற்குப் போதிய முக்கியத்துவம் அளித்தார்கள். ஸ்ரீரங்கப்பட்டணக் கோட்டை விஜய நகர அரசர்கள் காலத்தில் கி.பி. 1454ல் கட்டப்பட்டது. இது 5 கி.மீ தூரத்திற்குப் பரவியுள்ளது. இதனை ஒரு நகரம் என்றே கூறலாம். தற்போது இந்நகரின் மக்கள் தொகை 20,000. கோட்டையின் சுற்றளவு 4500 கி.மீ. இதில் நான்கு தலைவாசல்கள் உள்ளன. பெங்களூர், மைசூர், டில்லி, ஜலத்துவாரம் என அவை அழைக்கப்படுகின்றன. மூன்று கோட்டை மதில்களும், மூன்று நீண்ட அகழிகளும் உள்ளன. இடிந்து கிடக்கும் இக்கோட்டை இப்போதும் கம்பீரமாகவே உள்ளது. கோட்டையில் ரங்சநாதர் ஆலயம், திப்பு கட்டிய மசூதி, தற்போது இடிந்து கிடக்கும் லால் மஹால், போர்க் கைதிகளின் சிறைச்சாலை முதலியன உள்ளன.

சுதந்திரத்தைக் குறிக்கோளாகக் கொண்ட ஷேர். இ – மைசூர் திப்பு சுல்தான் திறமையுடன் ஆட்சி புரிந்தவர். ஆனால் ஆங்கில வரலாற்று ஆசிரியர்கள் அவரைப் பற்றி மட்டமாக எழுதியுள்ளார்கள்.

**உள் படம்: திப்பு**
**ஸ்ரீரங்கப்பட்டணம்**





கும்பஜ்




சிருங்கேரி மட சங்கராச்சாரியார்கள் திப்புவின் உதவியை நாடிய போது அவர்களது உடைமைகளைப் பாதுகாத்து அவர் கொடுத்தார். ஹைதரும் திப்புவும் ஹிந்துக்களின் ஆலயங்களுக்கு தாராளமாக நிதி உதவி செய்தார்கள். அவர்கள் கொடுத்த வெள்ளிப் பாத்திரங்கள் இன்றும் ஸ்ரீரங்கப்பட்டணத்தில் உள்ளன. ஹைதரும் திப்புவும் போருக்குச் செல்லுமுன் ரங்கநாதர் கோவிலில் வழிபாடுகள் செய்யச் சொல்லிவிட்டே கிளம்பிச் சென்றார்கள்.

1799ல் கடைசியாக நடந்த நான்காவது மைசூர்ப் போரில் ஸ்ரீரங்கப்பட்டணக் கோட்டை கடும் முற்றுகைக்கு ஆளாகியது. அப்போது திப்புவால் ஆங்கிலப் படையை எதிர்க்க முடியவில்லை. கடைசிப் போர் கோட்டையின் ஜலத்துவாரம் அருகே நிகழ்ந்தது. உடல் காயத்துடன் திப்பு அங்குள்ள குறுகிய வழியில் கோட்டையை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார். ஆனால் துரோகியான மீர் சாதிக் என்ற அதிகாரி அந்த வழியை அடைத்து விட்டான். திப்புவின் தலைக்குள் துப்பாக்கி குண்டுகள் பாய்ந்தன. திப்பு கீழே விழுந்தார். அந்த இடத்தில் சலவைக் கல் பதிக்கப்பட்டுள்ளதை இன்றும் காணலாம்.

ஸ்ரீரங்கப்பட்டணத்தில் திப்பு கட்டிய மசூதி மரியா நெசாத்பாக் கும்பஜ் ஆகிய மூன்று முக்கியமானவை. 1787ல் கட்டப்பட்ட மசூதி 250 வட்ட வளைவான படிகளைக் கொண்டது. அப்படிகளில் ஏறி மேலே நின்று பார்த்தால் அப்பகுதி முழுவதையும் பார்க்க முடியும்.

தலியா தௌலாபாக் கோட்டைக்கு வெளியே உள்ளது. திப்புவின் கோடை கால வாசஸ்தலம் இது. திப்பு செய்த போர்களின் காட்சிகள் எல்லாம் சுவர்களில் பொறிக்கப்பட்டுள்ளன. இப்போது அது ஒரு அருங்காட்சியகமாக மாற்றப்பட்டுள்ளது. ஊரின் தென் கிழக்கே பெரும் கோளம் (கும்பஜ்) உள்ளது. திப்புவின் பெற்றோர்களின் சடலங்கள் புதைக்கப்பட்ட நினைவிடங்கள் இங்கு உள்ளன. பசுமையான மரங்களுக்கிடையே கருப்புக் கல் தூண்களும் தந்தக் கதவுகளுடன் கூடிய கட்டிடம் இது. கோட்டையிலுள்ள ரங்கநாதர் ஆலயம் பல முறைகள் கட்டப்பட்டிருக்க வேண்டும். சேஷ சயனத்தில் படுத்திருக்கும் ரங்கநாத விக்கிரகத்தின் நீளம் 4 மீ. சேஷநாக விக்கிரகம் ஏழு தலைகளை விரித்துக் குடை போல உள்ளது. பக்தர்கள் கர்ப்பக்கிருகத்திற்கு வெளியே நின்றுதான் ரங்கநாதரை தரிசிக்க வேண்டும். கௌதம முனிவர், காவேரி மாதா ஆகிய இருவரின் விக்கிரகங்கள் ரங்கநாதரின் பாதங்களருகே உள்ளன.

இத் தீவிற்குக் கிழக்கே கோட்டைக்கும் சற்று தள்ளி சுல்தானின் ஆதிக்கத்தில் இருந்த திட்டுகள் உள்ளன. ஒரு காலத்தில் இவை மரங்களுக்கும், கைத்தறித் துணிகளுக்கும், காகிதத் தயாரிப்பிற்கும் பெயர் பெற்றிருந்தன. 18வது நூற்றாண்டில் பிரஞ்சுக்காரர்கள் கட்டிய கத்தோலிக்க மாதா கோவில் ஒன்று இங்கு உள்ளது.

தொலைவிலுள்ள ஸ்ரீரங்கப்பட்டணத்திலிருந்து 4 கி.மீ தொலைவிலுள்ள மற்றொரு முக்கிய தீவு ரங்கனி திட்டு என்பது. இது பறவைகளின் சரணாலயம்.

**ரங்கநாத சுவாமி ஆலயம்**



ஜூன் – டிசம்பர் மாதங்களுக்கிடையே ரங்கனி திட்டுத் தீவு பல நிற பட்சிகள் பறக்கும் ஆகாயத்தைக் கொண்டிருக்கும். 1940ல் இது பாதுகாக்கப்பட்ட பறவைகள் சரணாலயம் என்று அறிவிக்கப்பட்டது. பல நிறங்களில் பலரகப் பட்சிகள் ஆயிரக்கணக்கில் இத் தீவைத் தேடி வந்து தங்கி விட்டுப் போகின்றன. தீவின் நடுவே அமைக்கப்பட்ட மேடை மீது நின்று சுற்றுலாப் பயணிகள் இப்பறவைகளைக் கண்டு களிக்கிறார்கள்.

காவேரி நதி இங்கிருந்து 2 கி.மீ. சென்றதும் சோமநாதபுரம் என்ற கிராமத்தை அடைந்து தென் திசையில் திரும்புகிறது. இங்குள்ள ஆலயம் ஹோய்சால மன்னர்கள் கலைக்கு அளித்த ஆதரவுக்கு எடுத்துக்காட்டு. ஹளேபீடு, பேலூர் ஆலயங்களை விட இது மிகவும் பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. ஹோய்சால வம்ச மன்னரில் மூன்றாவது நரசிம்மரிடம் தண்டல் நாயகமாகப் பணிபுரிந்த சோமநாதர் 1258ல் நட்சத்திர வடிவில் இந்த கேசவ ஆலயத்தைக் கட்டினார். ஆலயத்தின் வெளிப்புறத்தில் ராமாயண மகா பாரதக் கதைகளைச் சிற்ப வடிவில் செதுக்கி இருக்கிறார்கள். கர்ப்பக் கிருகத்தில் 194 தெய்வச் சிலைகள் உள்ளன. முக்கிய ஆலயத்தில் விக்கிரகம் இல்லை. காலியாக உள்ளது. நம் நாட்டில் ஆலயங்களைக் கட்டியவர்களின் பெயர்களோ அல்லது சிற்பங்களின் பெயர்களோ அங்கு பொறிக்கப்படுவதில்லை. ஆனால் இந்தக் கோவிலின் மதில் சுவரில் அவற்றைக் காணலாம். இக்கோவிலைக் கட்ட நிதி உதவியவர்களின் பெயர்களும் இதில் காணப்படுகின்றன.

சோமநாதர் இப்பகுதியில் மேலும் நான்கு ஆலயங்களைக் கட்டினாராம். ஆனால் அவற்றில் பஞ்ச லிங்கேசுவரின் ஆலயமும், லக்ஷ்மி நரசிம்ம ஆலயமும் மட்டுமே உள்ளன. அவை கூட முடிந்தே உள்ளன. இவற்றை அரசாங்கம் இப்போது பாதுகாத்தால் சிறப்பாக விளங்கும்.



**சோமநாதர் ஆலயம்**



# கவியின் வாக்கு பலிக்கும்!

கலிங்க நாட்டில் கங்காபுரம் என்ற ஊரில் கங்காதரர் என்ற வியாபாரி இருந்தார். அவர் நேர்மையுடன் வியாபாரம் செய்து எல்லோருடைய மரியாதையையும் பெற்றார். அவருடைய ஒரே மகள் வனஜா. அவளை அவர் நகரிலுள்ள தன் தங்கையின் மகனான மாதவனுக்கு விவாகம் செய்து வைத்து அவனைத் தன் வீட்டோடு வைத்துக் கொள்ளவும் எண்ணிக் கொண்டிருந்தார்.

இதைத் தன் மைத்துனனுக்கும் கங்காதரர் தெரிவிக்கவே, அவரது தங்கையும் மிகவும் மகிழ்ந்து போனாள். அப்போது அவரது மைத்துனனின் வியாபாரம் நஷ்டத்தில் நடந்து கொண்டிருந்தது. கடனோ தலைக்கு மேல் ஏறி விட்டது. அவனுக்குக் கடன் கொடுக்கவும் யாரும் முன் வரவில்லை. எப்படியாவது பணம் சம்பாதித்து தானே கடனைப் போக்கி வியாபா ரத்தை நிலை நிறுத்தி நடத்த முடியும்! எனவே அயல் நாட்டிற்கு மாதவன் போய் இரண்டு வருட காலம் இருந்து பணம் சேர்த்துக் கொண்டு வர வேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது. இது கங்காதரருக்குத் தெரிவிக்கப் படாமல் இருந்தது. மாதவன் புஷ்பகத் தீவிற்குக் கிளம்புவதற்கான ஏற்பாடுகளை மும்முரமாகச் செய்து கொண்டிருந்த போதுதான் கங்காதரர் வனஜாவின் திருமண விஷயமாகப் பேசத் தன் மைத்துனனைத் தன் ஊருக்கு வருமாறு அழைப்பு விடுத்திருந்தார்.

மாதவனின் தாய் அப்போது ''என் அண்ணனின் மகளை நம் மகன் மணந்து கொண்டால் நம் பணக் கஷ்டம் தீர்ந்து விடும். நம் மகனும் அயல் நாட்டிற்குப் போய் சிரமப்பட வேண்டிய அவசியமும் இராது'' என்றாள். மாதவனோ ''அம்மா! நாம் வியாபாரம் செய்பவர்கள். வியாபாரத்தில் லாபமும் கிடைக்கலாம்.

—பாபநாசம் சாமா—

நஷ்டமும் ஏற்படலாம். அதற்காகக் கலங்கக் கூடாது. நான் எதுவும் செய் யாமல் என் மாமனார் வீட்டில் உட் கார்ந்து கொண்டிருக்க விரும்ப வில்லை. புஷ்பகத் தீவில் இருந்து வியாபாரம் செய்து நிறையப் பணத் தோடு இரண்டு ஆண்டுகள் கழித்து வருகிறேன். அதற்குப் பிறகும் இங்கே தான் வியாபாரம் செய்வேன். நான் வனஜாவை மணக்க வேண்டுமானால் உன் அண்ணா இரண்டு ஆண்டுகள் காத்திருக்க வேண்டும். இதை அவருக் குத் தெரிவித்து விடு'' என்றான்.

மாதவனின் தந்தையும் ''மாதவா! நீ சொல்வது சரி. நீயே போய் உன் தாய் மாமனைப் பார்த்து விஷயத்தைச் சொல்லி விட்டு வா'' என்றான். மாதவனும் தன் தாய் மாமனைக் காண கங்காபுரத்திற்குச் சென்றான்.

தன் மருமகனைக் கண்டு மகிழ்ந்த கங்காதரர் அவனை வரவேற்றார். மாதவனும் தான் புஷ்பகத் தீவிற்குப் போய் அங்கு இரண்டு வருடங்கள் தங்கி வியாபாரம் செய்து பணம் சம் பாதித்துக் கொண்டு வரப் போவ தாயும் அதற்குப் பிறகு வனஜாவைத் தான் மணந்து கொள்வதாயும் கூறி னான். கங்காதரரும் ''நீ வியாபாரம் செய்து பணம் சம்பாதிக்க விரும்பு கிறாய். இதற்காக நீ புஷ்பகத் தீவிற்குப் போக வேண்டியதற்கான ஏற்பாடு களையும் செய்து விட்டாய். வியா பாரத்தில் உனக்குள்ள ஈடுபாட்டைக் கண்டு நான் மகிழ்ச்சியே அடை கிறேன். உன் விருப்பப்படியே செய். இரண்டு ஆண்டுகளுக்குப் பின் உனக் கும் வனஜாவுக்கும் திருமணத்தை செய்து வைக்கிறேன். நீயும் வனஜா விடம் ஒரு வார்த்தை சொல்லி விடு'' என்றார்.

மாதவன் தன் தந்தையிடம் பேச வந்திருப்பதைக் கண்டு வனஜா மகிழ்ந்து போனாள். இனி தனக்கும் மாதவனுக்கும் விரைவில் திருமணம்





நடந்து விடுமென்றும் மாதவன் தன்னோடு தன் ஊரில் தன் வீட்டில் இருந்து விடுவான் என எண்ணிப் பூரித்துப் போனாள். அதனால் அவள் மாதவனைச் சந்தித்துப் பேசத் துடித்துக் கொண்டிருந்தாள்.

மாதவனும் வனஜாவைச் சந்தித்து தான் புஷ்பகத் தீவிற்கு வியாபாரம் செய்யப் போவதாயும் இரண்டு வருடங்களுக்குப் பின் அங்கிருந்து திரும்பி வந்து அவளை மணந்து கொண்டு நகரில் வியாபாரத்தைத் தொடரப் போவதாயும் கூறினான். வனஜாவும் ''நீங்கள் பணம் சம்பாதிப்பதற்காக புஷ்பகதீவிற்குப் போகத் தான் வேண்டுமா? என்னை மணந்து கொண்டு இதே ஊரில் சுகமாகஇருக்கலாமே. என் தகப்பனாரின் சொத்து, பணம் எல்லாம் எனக்குத்தானே?'' என்றாள்.

மாதவனோ ''வியாபாரிக்கு அழகு வியாபாரம் செய்வதே. ஓரிடத்தில் உட்கார்ந்து சுகமாகச் சாப்பிட்டுக் கொண்டிருக்கக் கூடாது. அதனால் 'திரை கடல் ஓடியும் திரவியம் தேடு' என்ற பழமொழிக்கு இணங்க நான் புஷ்பகத்தீவிற்குப் போய் வியாபாரம் செய்து நிறையப் பணம் சம்பாதித்துக் கொண்டு இரண்டே வருடங்களில் திரும்பி வந்து உன்னை மணந்து கொள்கிறேன். எனக்குச் சந்தோஷமாக விடை கொடு'' என்றான். அவளும் அவன் இஷ்டப்படியே புஷ்பகத் தீவிற்குப் போய் வரலாமென்றும் தான் அவனுக்காகக் காத்துக் கொண்டிருப்பதாகவும் கூறினாள்.

மாதவனும் கங்காதரரிடமும் அவரது மனைவியிடமும் ஆசிகளைப் பெற்றுக் கொண்டும் வனஜாவிடம் விடை பெற்றுக் கொண்டும் சென்றான். தன் ஊரை அடைந்து ஒரு நல்ல நாளில் தன் பெற்றோரிடம் விடை பெற்றுக் கொண்டு கப்பலில் ஏறிப் புறப்பட்டு புஷ்பக தீவிற்குச் சென்



றான். புஷ்பகத் தீவு அவனுக்கு முற்றி லும் புதிய இடமே. அதனால் அவன் மனம் தளர்ந்து விடவில்லை. வியா பாரத்தின் நெளிவு சுளிவுகளை அவன் தன் நாட்டில் இருந்த போது நன்கு கற்று அறிந்து கொண்டவன். அதனால் எந்தப் பொருளை எங்கு வாங்கி எப் போது விற்றால் லாபம் கிடைக்கும் என்பதை அவன் அறிவான். அதன் படியே அவன் நடந்து வந்ததால் அங்கு அவனது வியாபாரமும் நன்கு நடந் தது. அவ்வப்போது தன் நாட்டு வியா பாரிகளிடம் அவன் பணம் கொடுத்துத் தன் தந்தையிடம் கொடுக்கச் சொன் னான். அதனால் மாதவனின் தந்தை தன் வியாபாரத்தில் ஏற்பட்ட நஷ்டத் தைப் போக்கி லாபம் கிடைக்கும்படி வியாபாரத்தை நடத்தி வந்தான். இப் படியாக நாட்கள் கழியலாயின.

புஷ்பகத் தீவில் அந்நாட்டு மன்னனைக் கொல்ல நடந்த சதி தெரிய வந்தது. நல்லவேளையாக சதி முறியடிக்கப் பட்டது. ஆனால் சதி காரர்கள் தப்பி ஓடி விட்டனர் என்றும் அவர்கள் கலிங்க நாட்டவர் என்றும் சதித் திட்டம் கலிங்க நாட்டில்தான் போடப்பட்டது என்றும் விசாரணை யில் தெரிய வந்தது.

புஷ்பக மன்னன் கலிங்க மன்ன னுக்கு ஒரு கடிதம் எழுதி ''என்னைக் கொல்ல உங்கள் நாட்டிலுள்ள சிலர் சதித் திட்டம் தீட்டினார்கள். அவர் களது முயற்சி பலிக்கவில்லை. சதி காரர்கள் தப்பி ஓடித் தற்போது உங்கள் நாட்டில்தான் இருக்கிறார்கள். அவர் களைப் பிடித்து இங்கே அனுப்புங் கள். நீங்கள் எம் நண்பர். எனவே தங் களுக்கு இந்த வேண்டுகோள்'' எனக் கேட்டிருந்தான்.

புஷ்பக மன்னனின் கடிதத்தைப் படித்ததும் கலிங்க மன்னனுக்குக் கோபமும் ஆத்திரமும் வந்தது. ஒரு அயல் நாட்டு மன்னன் கலிங்க நாட்டு மக்களைச் சதிகாரர்கள் என்று குற்றம் சாட்டுவதா என அவன் கோபம் கொண்டான். ஆனால் சற்று நேரம் அது பற்றி யோசித்துப் பார்த்த போது புஷ்பக மன்னன் எழுதியது உண்மை யாக இருக்கலாமோ என்ற சந்தேகமும் ஏற்பட்டது.

கலிங்க மன்னனும் உடனே சதி காரர்களைக் கண்டுபிடித்து இழுத்து வரும்படித் தன் காவலதிகாரிகளுக்குக் கட்டளை இட்டான். இதற்குள் புஷ் பக மன்னன் தன் நாட்டிலுள்ள கலிங்க மக்களை எல்லாம் பிடித்து ஓரிடத்தில் சிறை வைத்தான். அவர்களில் மாதவ

னும் ஒருவன்.

கலிங்க நாட்டு கங்காபுரத்தில் கங்காதரர் வீட்டில் அவருடைய உறவினர் ஒருவர் திருமணம் நடத்தினார். அதற்கு வந்த ஒரு புரோகிதரும் ஒரு கவிஞரும் தம் புலமையைக் காட்ட சாதுரியமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது புரோகிதர் தம் சட்டையை அந்த அறையில் ஆணியில் மாட்டினார். அது சற்றுக் கிழிந்திருந்தது.

அதைக் கண்டு கவிஞர் ''எலும்புகள் கிடையாது. தலை இல்லை. கைகள் இருந்தாலும் விரல்கள் இல்லை. கால்களும் இல்லை. கிழிந்திருந்தாலும் அணிந்து கொள்ளலாம். அதற்கு உயிரும் கிடையாது'' என்றார். அப்போது புரோகிதர் ''ஐயா கவிஞரே! சட்டையைப் பற்றிய கவிதையை நிறுத்தி விட்டு கொஞ்சம் ஊசியும் நூலும் இருந்தால் கொடுங்கள். கிழிந்து போன என் சட்டையை தைத்துக் கொள்கிறேன்'' என்றார்.

கவிஞரும் ''என்னிடம் இல்லை. யாரிடமாவது கேட்டால் போகிறது'' என்று கூறிச் சுற்றிலும் பார்த்தார். அப்போது வனஜா வந்து கொண்டிருக்கவே கவிஞர் அவளைக் கூப்பிட்டு ''ஒரு கண்ணுடையது. காக்கையல்ல அது வேண்டும். அத்துடன் கடல் போல் பெருகி சந்திரன் போல் குறைந்து போவதும் வேண்டும்'' என்றார்.

வனஜாவிற்கு அது புரியவில்லை. அவள் உடனே தன் தந்தையை அழைத்து கவிஞர் கூறியதைச் சொல்லி ''இவர் என்ன கேட்கிறார்? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே''



என்றாள். அதைக் கேட்ட கங்காதரர் பதறிப்போய் ''கவிஞரே! இந்த மாதிரி புரியாத சொற்களைச் சொல்லி எங்களுக்கு ஆபத்தைக் கொண்டு வந்து விடாதீர்கள். நாட்டில் நிலைமை சரியில்லை. ஒற்றர்கள் எங்கும் திரிந்து கொண்டிருக்கிறார்கள். நீங்கள் ஏதோ இங்கு ரகசியம் பேசுவதாகக் கூறி சதிகாரர்கள் என்று அரசாங்க வீரர்கள் உங்களையும் என்னையும் பிடித்துக் கொண்டு போய் சித்திரவதை செய்வார்கள்'' என்றார்.

அதுகேட்டு புரோகிதர் பதறிப் போனார். அவர் கங்காதரரிடம் ''ஐயா! நாங்கள் இரகசியம் எதுவும் பேசவில்லை. பொழுதைப் போக்க மக்களிடையே சர்வ சாதாரணமாக வழங்கும் விடுகதைகளைத்தான் கூறிக் கொண்டிருந்தோம்'' என்றார். ஆனால்

கங்காதரரோ ''நீங்கள் பொழுதைப் போக்க விடுகதை கூறிப் பேசிக் கொண்டிருந்த போதிலும் என் போன்றவர்களுக்கு நீங்கள் பேசுவது புரியவில்லை. எங்களைப் போலவே அரசாங்க ஒற்றர்களும் நீங்கள் பேசுவதைக் கேட்டால் அது புரியாமல் நீங்கள் ஏதோ இரகசியம் பேசி சதி செய்கிறீர்கள் என்றுதான் எண்ணுவார்கள். இதுதான் என் கவலை'' என்றார்.

அதுகேட்டுக் கவிஞர் ''ஐயா! இதில் ரகசியம் ஒன்றும் இல்லை. 'ஒரு கண் உடையது' என்றால் ஊசி. 'கடல் போல் பெருகி சந்திரன் போலக் குறைவது' என்றால் நூல்கண்டு. கவிஞர்கள் இப்படி எல்லாம் பேசுவது அவர்களுடைய இயல்பு. உங்களுக்கு ஆபத்தை விளைவிப்பவர் அழியட்டும் என்று சாபம் கொடுக்கிறேன். கவிஞர்கள் கூறுவது ஒரு நாளும் பொய்யாகாது. சதிகாரர்கள் இந்த மாதிரி இடங்களில் இருக்க மாட்டார்கள். யாருக்கும் சந்தேகம் ஏற்படாதிருக்க கோவில்களில் தான் இருப்பார்கள். அங்குதான் கருடன் போல வட்டமிட்டுக் கொண்டிருப்பார்கள். அரசாங்க ஒற்றர்கள் கோவிலில் போய்த் தேடினால் சதிகாரர்கள் கிடைப்பார்கள்'' என்றார்.

இதைக் கல்யாண கூட்டத்தோடு சேர்ந்திருந்த அரசாங்க ஒற்றர்கள் கேட்டு விட்டார்கள். கருடன், கோவில் என்பதை இணைத்துப் பார்த்து அவர்கள் உடனே அவ்வூரின் பெருமாள் கோவிலுக்கு ஓடினார்கள். அங்கே உண்மையிலேயே சதிகாரர்கள் ஒளிந்து கொண்டிருந்தார்கள். அவர்களைப் பிடித்து அவர்கள் கலிங்க மன்னனிடம் இழுத்துச் சென்றார்கள். கலிங்க மன்னனும் புஷ்பக மன்னனிடம் அவர்களை ஒப்படைக்க ஏற்பாடு செய்தான்.

சதிகாரர்கள் கிடைத்ததும் புஷ்பக மன்னன் தான் பிடித்து வைத்திருந்த கலிங்க நாட்டவர்களை எல்லாம் விடுதலை செய்தான். மாதவனும் தான் சம்பாதித்த பணத்தோடு கலிங்கத்திற்குத் திரும்பி வந்தான். கங்காதரரும் வனஜாவும் அவனது வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். மாதவனின் பெற்றோர்களும் உடனேயே திருமணம் நடத்தச் சம்மதித்தார்கள். அதன்பின் அவனுக்கும் வனஜாவுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது.



-கிருஷ்ணரின் தூது-

# மகாபாரதம்

திருதராஷ்டிரன் கூட போரின் விளைவு பயங்கரமாக இருக்கும் என்று துரியோதனனை எச்சரித்தான். துரியோதனன் யார் சொன்னதையும் கேட்கவில்லை. அதுவரை ராஜசபையில் அமர்ந்திருந்த மன்னர்களெல்லாம் இனி போர் தான் நடக்கும் என்று எண்ணியவாறே அங்கிருந்து சென்றனர்.

போரில் தன் புதல்வர்களே வெற்றி பெற வேண்டுமென்பது திருதராஷ்டிரனின் ஆசை. அதனால் அவன் சஞ்ஜயனைத் தனிமையில் அழைத்து ''உனக்கு நம் படை பலமும் தெரியுமே. பாண்டவர்கள் படை பலமும் தெரியுமே. பாண்டவர்கள் பக்கத்திலுள்ள வீரர்களின் பலம் பற்றி எனக்கு விவரமாகக் கூறுகிறாயா?'' என்று கேட்டான்.

அதற்கு சஞ்ஜயன் ''அரசே! நான் தனிமையில் உங்களுக்கு எதுவும் கூற மாட்டேன். வியாசரும் காந்தாரியும் உங்களுடன் இருந்தாலே விவரமாகக் கூறுவேன்'' என்றான். உடனே திருதராஷ்டிரன் அவர்களை அழைத்து வர ஒரு ஆளை அனுப்பினான். அவர்கள் வந்ததும் சஞ்ஜயன் திருதராஷ்டிரனிடம் ''அரசே! கிருஷ்ணரும் அர்ஜுனனும் அவதாரபுருஷர்கள். பெரும் வீரர்கள். கிருஷ்ணரை மூவுலகிலுள்ள யாராலும் வெல்ல முடியாது. அவர் உங்கள் புதல்வர்களை ஒழிக்க தீர்மானித்து விட்டார்'' என்றான்.

திருதராஷ்டிரன் திடுக்கிட்டு





"இந்த ரகசியம் உனக்கு எப்படித் தெரிந்தது? எனக்கு ஏன் தெரியவில்லை?" என்று கேட்டான். அப்போது சஞ்ஜயன் "நான் கிருஷ்ணரை நன்கு அறிவேன். நீங்கள் அறியவில்லை" என்றான். வியாசரும் "கிருஷ்ணர் உன் மீது மிகவும் அன்பு கொண்டுள்ளார். சஞ்ஜயன் கிருஷ்ணரைப் பற்றி நன்கு அறிந்தவன். அவன் சொல்வதை நீ கேட்டு நடந்தால் உனக்கு நன்மையே ஏற்படும்" என்றார்.

இதே சமயம் உபப்லவத்தில் தருமர் கிருஷ்ணரிடம் "கிருஷ்ணா! நண்பர்கள் இது போன்ற தக்க சமயத்தில்தான் உதவ வேண்டும். எங்களுக்கு வேண்டிய போதெல்லாம் உதவுபவர் நீங்கள் ஒருவரே. உங்களை நம்பித்தான் போரில் கௌரவர்களை எதிர்த்து அவர்களை ஒழிக்க கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறோம். எங்களைக் காப்பாற்றுவது உங்கள் பொறுப்பே" என்றார்.

அப்போது கிருஷ்ணர் "தருமா! நீ சொல்ல வேண்டியதை எல்லாம் சொல்லி விடு" என்றார். தருமரும் "சஞ்ஜயன் சொன்னதையெல்லாம் கேட்டீர்களல்லவா? திருதராஷ்டிரன் என்ன சொல்லச் சொன்னானோ அதைத்தான் அவன் சொன்னான். அவன் எங்களுக்கு நாட்டைக் கொடுக்காமலேயே சமாதானம் செய்து கொள்ள விரும்புகிறான். திருதராஷ்டிரனை நம்பியதால் நாங்கள் வனவாசம் செய்ய வேண்டியதாயிற்று. எங்களுக்கு ஐந்து வீடுகள் கொடுத்தால் கூடப் போதும். போர் வேண்டாம் என அப்போது கூறவும் நாங்கள் தயார். ஆனால் திருதராஷ்டிரன் அதற்குக் கூட இணங்கவில்லையே. க்ஷத்திரியனின் கடமை போர் புரிவது. ஆயினும் போர் புரியாமல் சமாதானமாகப் போக நாங்கள் தயார். ஆனால் துரியோதனன் அதற்குச் சம்மதிக்க வில்லையே. எனவே போர் மூள்வது நிச்சயமாகி விட்டது" என்றார்.

கிருஷ்ணரும் "தருமா! எனக்கு நீங்களும் கௌரவர்களும் சமமே.

இரு தரப்பினருக்கும் நன்மையை விரும்பியே நான் கௌரவர்களிடம் உங்களுக்காக தூது செல்கிறேன். உங்கள் ஆசைகளும் நிறைவேறி கௌரவர்களும் திருப்திப்படும் விதத்தில் ஒரு நல்ல ஏற்பாட்டைச் செய்ய முயல்வேன். போர் மூளாமல் தவிர்க்கவே என் முயற்சி இருக்கும்'' என்றார்.

தருமரோ ''அந்த துரியோதனன் சமாதானத்திற்கு இணங்க மாட்டான். அவனோடு சேர்ந்திருப்பவர்களும் அவனைப் போன்றவர்களே. இப்படிப்பட்டவர்களுக்கிடையே நீங்கள் அமர்ந்து சமாதானத்திற்காக பேசுவதை நான் விரும்பவில்லை. உங்களுக்கு அங்கு ஏதாவது ஆபத்து கூட நேரலாம்'' என்றார்.

கிருஷ்ணர் புன்னகை புரிந்தவாறே ''தருமா! துரியோதனனைப் பற்றி நன்கு அறிவேன். அங்குள்ளவர்களுக்கும் என்னைப் பற்றியும் தெரியும். அவர்கள் எனக்கு எந்த ஆபத்தையும் விளைவிக்கத் துணிய மாட்டார்கள். நாம் சமாதானத்திற்கு முயலாவிட்டால் நமக்குத் தான் கெட்ட பெயர் வரும். எனவே நான் சமாதான தூது போவதுதான் நல்லது'' என்றார்.

தருமரும் '' உங்கள் பேச்சிற்கு மறு பேச்சு பேச என்னால் முடியுமா? நீங்கள் நல்லபடியாக சமாதானப் பேச்சுகளை நடத்தி விட்டு க்ஷேமமாகத் திரும்பி



வரவேண்டும் என்பதே எங்கள் விருப்பம்'' என்றார். கிருஷ்ணரும் ''தருமா! நீ தர்ம நியாயத்தைக் கடைப்பிடிப்பவன். நான் போய் அவர்களிடம் உன் தர்ம வழிகளைப் பற்றிக் கூறி சமாதானத்திற்கான வழி காண்கிறேன். ஆனால் இருக்கும் நிலவரத்தைப் பார்த்தால் போரைத் தவிர்க்க முடியாது என்று தோன்றுகிறது. துரியோதனன் உயிருடன் இருக்கும்வரை உன் நாடு உனக்குக் கிடைக்கவே கிடைக்காது. எனவே நீயும் போருக்குத் தயாராகவே இருக்க வேண்டியதுதான்'' என்றார்.

அப்போது பீமன்



கிருஷ்ணரிடம் ''நீங்கள் கௌரவர்களின் அரச சபைக்குச் செல்வது மிகவும் சரியானதே. எல்லோர் முன்னிலையிலும் நாங்கள் சமாதானத்தையே விரும்புவதாக அந்த துரியோதனனுக்கு எடுத்துக் கூறுங்கள்'' என்றான்.

பீமன் ஒருநாளும் இப்படி எல்லாம் பேசியதே இல்லை. இது எல்லோருக்கும் ஆச்சரியத்தை அளித்தது. அப்போது கிருஷ்ணர் ''பீமா! போர் என்றாலே உற்சாகத்துடன் குதிப்பாயே. இப்போது இப்படி ஏன் பேசுகிறாய்? துரியோதனன் முதலிய கௌரவர்களை நீ கொல்லப் போவதில்லையா? துரியோதனனை கொல்ல துடி துடித்துக் கொண்டிருந்த நீயா இப்படிப் பேசுகிறாய்? நீ க்ஷத்திரியன். பல வீரச்செயல்களை புரிய வேண்டியவன். எனவே இப்படிப் பேசுவது உனக்கே நன்றாக இருக்கிறதா?'' என்று கேட்டார்.

இதைக் கேட்டதும் பீமனுக்கு ரோஷம் வந்து விட்டது. அவன் கிருஷ்ணரிடம் ''கிருஷ்ணா! நான் சொன்னதை நீங்கள் நேர்மாறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். இவ்வளவு காலமாக என்னை அறிந்த நீங்கள் இப்படியா கூறுகிறீர்கள்? நான் யாருக்கும் எதற்கும் பயப்படவில்லை. எம் பரதவம்சம் அழிந்து போய் விடக்கூடாது என்ற கவலையால் தான் சமாதானத்திற்கானவழி தேடுங்கள் என்று கூறினேன்'' என்றான்.

இதைக் கேட்டு கிருஷ்ணர் சிரித்து ''பீமா! உன்னை இகழ வேண்டும் என்பதற்காக நான் இவ்வாறு கூறவில்லை. உன் சக்தியையும் பலத்தையும் பற்றி நான் நன்கு அறிவேன். உங்கள் நலனைக் கருத்தில் கொண்ட நான் கௌரவர்களின் சபையில் சமாதானத்திற்கான பேச்சைத் தொடங்குவேன். ஆனால் என் முயற்சி பயனளிக்கா விட்டால் போர்தான் மூளும். அப்போது

உனக்கு பொறுப்பு அதிகம். அதை உணர்த்தவே நான் அவ்வாறு பேசினேன்'' என்றார்.

இதன்பின் அர்ஜுனன் கிருஷ்ணரிடம் ''கௌரவ சபையில் நீங்கள் என்ன சொல்ல வேண்டும் என்பதை எங்கள் அண்ணாவே கூறி விட்டார். கௌரவர்கள் சமாதானத்திற்கு ஒப்புக் கொள்ள மாட்டார்களென நீங்கள் நினைப்பது உங்கள் பேச்சிலிருந்து தெரிகிறது. ஒருவேளை நீங்கள் நினைப்பது போல நடந்தாலும் நடக்கலாம். இருந்தாலும் நாம் சமாதானமாகப் போகவே முயல வேண்டும். எங்கள் இரு தரப்பினரிடையே நட்பு வளரும்படி முயல வேண்டும். இதை உங்களால் செய்ய முடியும். நீங்கள் எதைச் செய்தாலும் அது எங்களது நன்மைக்காகவே இருக்கும். கௌரவர்களைப் போரில் கொன்றாக வேண்டுமென்று இருந்தால் அதுவே நடந்து விட்டுப் போகட்டும். போரா அல்லது சமாதானமா என்பதை நீங்களே முடிவு செய்யுங்கள்'' என்றான்.

கிருஷ்ணரும் ''அர்ஜுனா! நான் என்னால் முடிந்த வரை முயற்சி செய்கிறேன். துரியோதனனுக்கு ச்குனியும் கர்ணனும் தூபம் போடுவார்கள். அதனால் அவன் உங்களுக்கு நாட்டைக் கொடுக்க மாட்டான். தருமன் சமாதானமாகப் போக விரும்புகிறான்



என்பதை அவனிடம் சொல்லக் கூடாது. பேச்சுவாக்கில் அதை சூசகமாகத்தான் நான் தெரிவிக்கப் போகிறேன்'' என்றார்.

அடுத்து நகுலன் கிருஷ்ணரிடம் என் ''என் தமையன்களெல்லாம் தங்கள் தங்கள் கருத்துக்களைக் கூறி விட்டார்கள். உங்களுக்கென ஒரு அபிப்பிராயம் இருப்பதும் தெரிகிறது. ஆனால் இவை எல்லாமே எடுபடாமல் போனாலும் போய் விடலாம். நிலைமை எப்படி இருக்கிறதோ அதற்கேற்றபடி செய்கையும் மாறும். எனவே அங்குள்ள நிலைமையைப் பார்த்துக் கொண்டு என்ன செய்ய வேண்டும்



என்பதை நீங்களே தீர்மானியுங்கள்'' என்றான்.

சஹாதேவனும் கிருஷ்ணரிடம் ''அண்ணா தருமர் தர்ம நியாயப்படி நடக்கக் கூறினார். ஆனால் நீங்கள் போர் நடக்கும்படி செய்யுங்கள். அவர்களா சமாதானத்தை நாடப் போகிறார்கள்?'' என்றான். சாத்தியகியும் நகுலன் கூறியதையே சொன்னான். பாண்டவர்களுக்கு உதவ வந்தவர்கள் யாவரும் வெற்றி முழக்கம் செய்தார்கள்.

அப்போது துரௌபதி கிருஷ்ணரிடம் ''மூத்தவர் நியாயம் பேசிக் கொண்டு ஐந்து வீடுகள் கொடுத்தாலே போதும் என்கிறார். ஆனால் அந்த துரியோதனன் இதற்குச் சம்மதிக்கவில்லை. அவன் பாண்டவர்களுக்கு அவர்களது நாட்டைக் கொடுக்க வேண்டும் என்றுதான் சமாதானம் செய்து கொள்ள வேண்டும். போர் மூளுமேயானால் கௌரவர்களைப் பாண்டவர்களால் கொன்று விட முடியும். அதுதான் கௌரவர்களுக்குக் கிடைக்க வேண்டிய சரியான தண்டனை. என்னை அவமானப்படுத்திய துரியோதனன் இன்னமும் உயிருடன் இருக்கிறான். நீங்கள் சமாதானப் பேச்சு வார்த்தைகள் நடத்தும் போது அவிழ்ந்து முடியாமல் இருக்கும் என் கூந்தலை நினைத்துக் கொள்ளுங்கள். அதைப் பற்றிக் கொண்டுதானே என்னை அரச சபைக்கு இழுத்துக் கொண்டு வந்தார்கள்? அந்த துச்சாதனனின் கை வெட்டப்பட்டு தரையில் தனியாக உருண்டு விழுவதை நான் கண்டு மகிழ வேண்டும். அப்போது தான் என் மனம் ஆறுதல் அடையும்'' என்று ஆவேசத்துடன் கூறினாள்.

கிருஷ்ணன் அவளைத் தேற்றி விட்டு பாண்டவர்களின் தூதராக ஹஸ்தினாபுரத்திற்குப் புறப்பட்டார். அவர் சாத்தியகியிடம் ''சாத்தியகி! என் ரதத்தில் சங்கு, சக்கரம், கதாயுதம் மற்றுமுள்ள ஆயுதங்களை வைத்துவிடு. துரியோதனனும் அவனைச் சேர்ந்தவர்களும் கொடியவர்கள்.

பஞ்சமா பாதகங்கள் புரியச் சற்றும் அஞ்சாதவர்கள். நாம் எதிரியைக் குறைவாக மதிப்பிட்டு விடக் கூடாது'' என்றார்.

எல்லாம் எடுத்து வைத்த பின் கிருஷ்ணர் தன்னோடு சாத்தியகியையும் ரதத்தில் தம் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு ஹஸ்தினாபுரத்திற்குப் புறப்பட்டார். பாண்டவர்களும், சேகிதானனும், திருஷ்டத்யும்னனும், துருபதனும், காசி ராஜனும், விராடனும் மற்றும் பல அரசர்களும் கிருஷ்ணரை வழியனுப்பிவிட்டு வந்தார்கள்.

வழி அனுப்புகையில் தருமர் கிருஷ்ணரைத் தழுவிக் கொண்டு ''கிருஷ்ணா! எம் தாயாரான குந்தி தேவியை நாங்கள் மிகவும் விசாரித்ததாகக் கூறுங்கள். அவர் எங்களை எவ்வளவு சிரமங்களுக்கிடையே வளர்த்துப் பெரியவர்களாக்கியுள்ளார்? எங்கள் காரணமாக அவருக்குத்தான் எவ்வளவு கஷ்டங்கள்! எங்கள் க்ஷேமம் பற்றி அவரிடம் கூறி ஆறுதலும் அளியுங்கள். திருதராஷ்டிரன், பீஷ்மர், துரோணர், கிருபர், பாஹ்லிகர், சோமதத்தர், அசுவத்தாமர் முதலியவர்களையும் மிகவும் விசாரித்ததாகவும் பணிவான வணக்கங்களையும் தெரிவிக்கவும். விதுரரைத் தனிப்பட்ட முறையில் விசாரித்ததாகவும் எம் பணிவான வணக்கங்களையும் தெரிவிக்கவும்'' என்றான்.

தாருகன் வேகமாக ரதத்தை ஓட்டிக் கொண்டு செல்ல ரதம் கௌரவர்களின் நாட்டினுள் பிரவேசித்து. கிருஷ்ணர் அன்றிரவு விருகஸ்தலத்தில் தங்கத் தீர்மானித்தார். அங்குள்ள பிரமுகர்கள் கிருஷ்ணரை உபசரித்து மரியாதைகள் செய்தார்கள். கிருஷ்ணரும் அவற்றை ஏற்றுக் கொண்டார்.



# தம்போத்பவன்

வெகு காலத்திற்கு முன் தம்போத்பவன் என்ற மன்னன் தன் நாட்டை நன்கு ஆண்டு வந்தான். அந்த நாடும் மிகவும் செழிப்பாக இருந்தது. இதனால் அவன் மிகவும் கர்வம் கொண்டு விட்டான். அதனால் தன் சபையோரிடம் ''இவ்வுலகில் என்னை விட சக்தி வாய்ந்தவனும் உயரியவனுமானவன் யாராவது இருக்கிறானா?'' என்று அடிக்கடி கேட்டு வந்தான். சபையோரும் அவனது கோபத்திற்கு ஆளாக வேண்டுமே என்று பயந்து அவனை விட உயர்ந்தவன் யாருமே இல்லை என்று கூறி வந்தார்கள்.

ஒருநாள் ஒரு முனிவர் அவனது சபைக்கு வந்தார். அன்றும் மன்னன் வழக்கம் போல அதே கேள்வியைக் கேட்கவே, முனிவரும் ''ஏன் இல்லை? ஒருவரல்ல. இருவர் இருக்கிறார்கள். அவர்கள் நர நாராயணர்கள். கந்தமான பர்வதத்தில் இருக்கிறார்கள். அவர்களே இவ்வுலகில் எல்லோரையும் விட உயர்ந்தவர்கள்'' என்றார்.

முனிவர் கூறியது தம்போத்பவனை மிகவும் கலக்கி விட்டது. அவன் படையோடு நர நாராயணனைக் காண கந்தமாதனப் பர்வதத்திற்குச் சென்றான். அங்கு மலை உச்சியில் ஒல்லியான இரு முனிவர்கள் இருப்பதை அவன் கண்டான். அவனுக்கு அது பெரும் ஏமாற்றமாக இருந்தது. இவர்களா என்னைவிடச் சக்தி வாய்ந்தவர்கள்? இவர்கள் எனக்கு எவ்விதத்திலும் சமமாக மாட்டார்கள் என எண்ணி அவன் திரும்பிப் போய் விட நினைத்தான்.

ஆனாலும் வந்தது வந்தாயிற்றே. அந்த இருவரை மிரட்டிப் பார்க்கலாம் என்று எண்ணி அவன் உரத்த குரலில் மிரட்டினான். அவர்கள் கீழே இறங்கி வராததால் கண்டபடி அவர்களைத் திட்டினான்.

அப்போது அவ்விருவரில் ஒருவரான நரர் மெதுவாகக் கண் திறந்து அருகிலிருந்த தர்பைப் புல்லை மூன்று துண்டுகளாகக் கிள்ளி அம் மன்னனின் படை இருந்த பக்கத்தில் விட்டெறிந்தார். மறுநிமிடமே அப்படை வீரர்களின் கண்கள் பார்க்கும் சக்தியை இழந்து விட்டன. அவர்களின் உருவங்களும் மாறிப் போயின.

முனிவர்களின் தவ வலிமைக்கு முன் தன் பலம் எடுபடாது என்பதை மன்னன் தெரிந்து கொண்டான். அவனது கர்வம் அடங்கியது. அவன் தன்னை மன்னித்து, தன் படை வீரர்களை முன் போலாக்கி விடும்படி வேண்டி அவர்களது கால்களில் விழுந்தான்.

நர நாராயணர்கள் அவனை மன்னித்து அவனது படை வீரர்களை முன் போலாக்கி பார்வை கிடைக்கும்படிச் செய் தார்கள். கர்வத்தை விட்டொழித்து மக்களிடம் அன்பாக நடந்து கொள்ளும்படி அவர்கள் அவ னுக்கு அறிவுரை கூறினார்கள்.

அன்று முதல் அவன் கர்வத்தை விட்டொழித்து எல்லோரிடத்திலும் அன்புடன் பழகலானான்.



ஆங்கிலேயர்களை எதிர்த்த வீரர்கள் 8

# ராணி சென்னம்மா

◆ கருத்து: மீரா உக்ரா
◆ ஓவியம்: கௌதம் சென்

தென்னிந்தியாவில் கிட்டூர் ஒரு சிறிய சமஸ்தானம். மிகவும் செழிப்பானதும் கூட



அதன் மன்னர் சிவலிங்க ருத்ர செர்ஜா. தன் தத்துப் புதல்வனைத் தன் சிற்றன்னையிடம் ஒப்படைத்து விட்டு 1824ல் இறந்து போனார்.



தார்வாரிலுள்ள ஆங்கிலப் பிரதிநிதி தத்துப் புதல்வனை வாரிசாக ஒப்புக் கொள்ள மறுத்தான்.




சில நாட்களுக்குப் பிறகு–







இரு தரப்பினரும் போருக்குத் தயாரானார்கள். 1824 அக்டோபர் 23ல் டாக்கர் படையுடன் வந்தான்
கதவைத் திறவுங்கள்
முடியாது! உங்களை உள்ளே வர விடக்கூடாது என்பது ராணியின் கட்டளை.


கால் மணிக்குள் உங்கள் ராணி சரணடைய வேண்டும். இல்லாவிட்டால் துப்பாக்கிகள் வெடிக்கும்.


ராணியின் பதிலை எதிர்பார்த்தார்கள். நேரம் போனது.
வெட்டு
கொல்!


திடீர் எதிர்த் தாக்குதல் ஆங்கிலேயர்களைத் திகைக்க வைத்தது.
என்ன?


ஐயோ!
டாக்கரோடு எல்லா ஆங்கிலேயர்களும் கொல்லப்பட்டனர்


இன்னொரு போர் வருமென ராணி சென்னம்மாவுக்குத் தெரியும்
படையில் இளைஞர்களைச் சேருங்கள். கோலாப்பூர் மன்னரிடம் உதவி கேளுங்கள்.
கோலாப்பூர் செல்லும் ராணியின் தூதர்களை ஆங்கிலேயர்கள் பிடித்து வைத்தார்கள்.


ஆயினும் ராணி சொல் கேட்டு மக்கள் முன் வந்தனர்.
ராணியாரே! இளைஞர்கள் முதியோர் யாவரும் போராட வருகிறார்கள்.


இவர் சாங்கோலி கிராமத்து ராமண்ணா
வாருங்கள் ராமண்ணா! உம் போன்றவர்களே தேவை


டிசம்பர் முதல் தேதி கர்னல் மெக்லாட் 25000 வீரர்களுடன் கோட்டையைச் சூழ்ந்து விட்டான்.
கோட்டை பலமானது. கோட்டைக்குள் வீரர்கள் பயங்கரமாய் போராடினார்கள். எனவே யாருக்காவது லஞ்சம் கொடுத்துப் பார்க்க வேண்டும்.


இரண்டு நாட்களுக்குப் பின் ஆங்கிலேயர்கள் பீரங்கியால் தாக்கினார்கள்.
BOOM!

ராணி சென்னம்மாவின் ஆட்கள் எதிர்த்து தாக்க முடியாது பயந்தனர்.




டிசம்பர் 4ந் தேதி கோட்டை வீழ்ந்தது.













# கழுகு மூக்கு காளியம்மா

கோட்டூர் என்ற கிராமத்தில் கோவிந்தசாமி என்பவனின் மகள் லட்சுமி. லட்சுமிக்கும் அவளது அத்தை மகன் ஆறுமுகத்திற்கும் கல்யாணம் நடக்க வேண்டும் என அவர்களது சிறுவயதிலேயே நிச்சயிக்கப் பட்டது. இச்சமயத்தில் கோவிந்தசாமி பட்டணத்திற்குப் போய் வியாபாரம் செய்து சில ஆண்டுகளில் லட்ச லட்சமாகச் சம்பாதித்து விட்டான்.

பட்டணத்திலிருந்த கோவிந்தசாமி தன் மகள் லட்சுமியை கிராமத்து விவசாயி ஆறுமுகத்திற்கு மணம் செய்து வைக்க விரும்பவில்லை. ஆனால் லட்சுமி மணந்தால் ஆறுமுகத்தைத் தான் மணப்பேன் என்று பிடிவாதம் பிடிக்கவே கோவிந்தசாமியும் கோட்டூருக்குப் போய்ப் பேசி முடித்துக் கொண்டு வருவதாகக் கூறிவிட்டுக் கிளம்பிச் சென்றான்.

அவன் மறுநாளே பட்டணத்திற்குத் திரும்பி வந்து ''இரண்டு மாதங்களுக்கு முன் ஆறுமுகம் வீட்டை விட்டு வெளியேறி ஊருக்கு வெளியே கிழக்குப் பக்கமுள்ள காட்டில் ஒரு குளக்கரையில் ஒரு குடிசை போட்டுக் கொண்டு அதில் இருக்கிறான். அவன் யாரையும் பார்க்கவும் பேசவும் விரும்பவில்லை. இப்படிப் பட்ட சன்னியாசிக்கா நம் லட்சுமியைக் கொடுப்பது?'' என்றான். அவனது மனைவியும் ''நீங்கள் சொல்வது சரியே'' என்றாள்.

ஆறுமுகம் சன்னியாசியாகி விட்டானா? ஏன்? ஆனால் ஏன் யாரையும் பார்த்துப் பேச மறுக்கிறான்? இதில் ஏதோ ரகசியம் இருக்கிறது. அது என்ன என்று தெரிந்து கொள்ள வேண்டுமென லட்சுமி தீர்மானித்துக் கொண்டாள்.

அன்றிரவு முழுவதும் லட்சுமி தூங்கவில்லை. ஆறுமுகத்தை நேரில் கண்டு அவனுடன் பேசி உண்மையைத் தெரிந்து கொள்ள வேண்டு

—சங்கர சுவாமிநாதன்—



மெனஅவள்தீர்மானித்தாள். ஆனால் அதைத் தன் பெற்றோர்களிடம் கூறினால் அவர்கள் அதற்கு அனுமதி அளிக்க மாட்டார்களென நினைத்து இரவோடு இரவாகதன்வீட்டிலிருந்து கிளம்பிகாட்டிலுள்ளஆறுமுகத்தைக் காணச் சென்றாள்.

அவள் ஆறுமுகம் இருந்த குடிசையை அடையும் போது மாலைப் பொழுது வந்து விட்டது. அப்போது ஆறுமுகம் குளக்கரையில் உட்கார்ந்து கொண்டு ஏதோ யோசனையில் ஆழ்ந்திருப்பதை அவள் கண்டாள். லட்சுமி அவன் முன் போய் நிற்கவே அவன் திடுக்கிட்டுப் போனான். அவளிடம் ''நீ ஏன் இங்கு வந்தாய்?'' என்று கோபத்தோடு கேட்டான்.

லட்சுமியும் ''நம் திருமணம் பற்றிப் பேச வந்திருக்கிறேன். நீங்கள் ஏன் இப்படி சன்னியாசி போல இருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

ஆறுமுகமும் ''அதைச் சொல்ல மாட்டேன்'' என்று கூறி சட்டென எழுந்து போய் தன் குடிசைக்குள் புகுந்து கதவை மூடித் தாளிட்டுக் கொண்டான். லட்சுமி கண்ணீர் வடித்தவாறே அங்கிருந்து சென்றாள்.

ஆறுமுகத்தின் இந்தச் செயல் லட்சுமிக்கு வியப்பையும் திகைப்பையும் அளித்தது. ஏன் பேசிக் கொண்டிருக்கும் போதே சட்டெனப் பேச்சை நிறுத்தி விட்டு அவன் குடிசைக்குள் சென்று விட்டான் என்பது பற்றி அவள் யோசித்துப் பார்த்தாள். அதற்கான காரணம் எதுவும் அவளுக்குத் தெரியவில்லை.

அவள் அங்கிருந்து கொஞ்ச தூரம் போனதும் மழை பிடித்துக் கொண்டது. அவள் ஒரு மரத்தடியில் நின்றாள். மழை நிற்கவில்லை. அதனால் அவள் திரும்பி ஆறுமுகத்திற் குடிசைக்குப் போனாள். அங்கு அன்றிரவை கழித்து விட்டு மறுநாள் காலையில் எழுந்து போய் விடலாம் என்று

எண்ணினாள்.

அவள் குடிசைக் கதவை வெகு நேரம் தட்டியும் அது திறக்கப்பட வில்லை. அதனால் கதவினருகே இருந்த ஜன்னல் வழியாக அவள் உள்ளே பார்த்தாள். அங்கே ஆறுமுகம் இருக்கவில்லை. அங்குள்ள கட்டி லின் மீது ஒரு பெரிய கழுகு இருந்தது. அப்போது அவளுக்கு ஒருவிதமாக விஷயம் விளங்கலாயிற்று. ஆறுமுகம் தான் கழுகாக மாறி இருக்கிறான். இது ஏன்? உண்மை என்ன என்று தெரிந்து கொள்ள வேண்டுமென எண்ணி அவள் குடிசை யின் கதவனருகே படுத்துத் தூங்கி விட்டாள்.



காலையானதும் கதவைத் திறந்து கொண்டு ஆறுமுகம் வெளியே வந் தான். அவன் லட்சுமியை அங்கே பார்த்து ஆச்சரியப்பட்டு நிற்கையில் லட்சுமி ''நேற்றிரவு நீங்கள் குடிசை யில் இருக்க வில்லையே. உள்ளே ஒரு கழுகுதான் இருந்தது. இப்போது அது இல்லை. நீங்கள் இருக்கிறீர்கள். என்ன விஷயம்?'' என்று கேட்டாள். ஆறுமுகம் பெருமூச்சு விட்டவாறே ''இந்த விஷயம் யாருக்குமே தெரியக் கூடாது என்றிருந்தேன். ஆனால் இப் போது உனக்குத் தெரிந்து விட்டதே. இரண்டு மாதங்களுக்கு முன் உன்னைப் பார்க்க பட்டணத்திற்கு வந்து கொண்டிருந்தேன். சீக்கிரம் பட்டணம் போக வேண்டுமென்ற ஆசையில் காட்டில் குறுக்கு வழியில் சென்றேன். காட்டில் ஒரு புளியந் தோப்பை அடையும் போது மாலைப் பொழுது வந்து விட்டது. அங்கே ஒரு புளிய மரத்தடியே ஒரு கட்டிலில் விகார உருவுடைய ஒரு பெண் உட் கார்ந்திருந்தாள். கருப்பு நிறம், பழுப்பு நிறத் தலை மயிர், கழுகு மூக்கு நீண்ட சிவப்பு நிற அங்கி அணிந்திருந்தாள். அவள் என்னைப் பார்த்ததும் ''வெகு நாட்களுக்குப் பிறகு ஒரு அழகனைக் காண் கிறேன். எங்கே போகிறாய்?'' என்று கேட்டாள். நான் பயந்து போய் ''என்னை மணக்கப் போகும் பெண்ணைப் பார்க்கப் போய்க் கொண்டிருக்கிறேன்'' என்றேன். அவளோ ''நீ யாரையோ கல்யாணம் செய்து கொள்வதா? என்னை இப் போதே இந்தப் புளிய மரத்தினை சாட் சியாக வைத்து மணந்து கொள்'' என்றாள். நான் பயந்து ''ஐயோ! உன்னையா மணப்பது?'' என்று கத்தி விட்டேன். அவளோ ''ஏன்? மணக்க மாட்டாயா?'' எனக் கேட்கவே,



நானும் ''உன் கழுகு மூக்கும், கருப்பு நிறமும் ஒரு அழகா?'' எனக் கேட்டேன். அவளும் ''இந்தக் காளியம்மாவையா மணக்க மாட்டாய்? இனி நீ பகலில் மனித உருவில் இருப்பாய். இரவில் கழுகாகவும் மாறுவாய்'' எனக் கூறி ஏதோ மந் திரத்தை உச்சரித்தாள். அப்போதே நான் கழுகாகி விட்டேன். அங்கிருந்து பறந்து இக் குளக்கரைக்கு வந்தேன். காலையில் மீண்டும் மனிதனாகி விட்டேன். இதை யாரிடமும் சொல்லாமல் இங்கேயே குடிசை போட்டுக் கொண்டு தங்கி விட்டேன். என் மனம் வேதனைப்பட்டதால் நான் யாரையுமே பார்க்க விரும்பாமல் இருக்கிறேன்'' என்றான்.

இதைக் கேட்ட லட்சுமி ''ஓ! இதுவா விஷயம்? இவ்வளவு நாட்களாக இதை யாரிடமும் சொல்லாமல் இருந்திருக்கிறீர்களே. அந்தக் காளியம்மாளிடம் பயமா? நல்லவேளையாக எனக்கு இப்போது தெரிந்ததே. இனி கவலைப்படாதீர்கள். உங்களை அவள் பிடியிலிருந்து விடுவிக்க நான் வழி செய்கிறேன்'' என்று சொல்லி விட்டு அங்கிருந்து கிளம்பினாள். அவள் காளியம்மாவைக் கண்டு ஆறு முகத்திற்குப் போட்ட மந்திரத்தை விலக்குமாறு வேண்டிக் கொள்ள நினைத்தாள். அவள் புளியந் தோப்பை அடைந்த போது மத்தியானமாகி விட்டது. காளியம்மா அங்கே ஒரு மரத்தடியே உட்கார்ந்து கொண்டு ஏதோ தின்று கொண்டிருந்தாள்.

லட்சுமி மெதுவாகப் போய் காளியம்மாவின் பக்கம் கட்டிலில் அமர்ந்து கொண்டு ''அக்கா! நீ சரியாகச் சாப்பிடுவதே இல்லையா? ஏன் இப்படி இளைத்துப் போய் விட்டாய்?'' என்று கேட்டாள்.

அவளோ ''யார் நீ? எங்கோ போகிற நீ அக்கா என்று என்னிடம் உறவா கொண்டாடுகிறாய்? என் பக்கத்தில் கட்டிலில் வந்து வேறு உட்கார்ந்து விட்டாய். என்ன துணிச்சல் உனக்கு?'' என்று உறுமினாள். லட்சுமியோ ''நான்தான் உன் தங்கை என்று கூறினேனே. அத்தான் எங்கே போயிருக்கிறார்'' என்று கேட்டாள். காளியம்மா பெருமூச்சு விட்டவாறே ''எனக்கு இன்னமும் திருமணம் நடக்கும் அதிர்ஷ்டமே வரவில்லை. நான் என் மந்திர சக்தியோடு இப்படியே இறக்க வேண்டும் போலத்தான் இருக்கிறது'' என்றாள்.

அப்போது லட்சுமி ''என்னக்கா!

உன் மந்திர சக்தியால் ஒருவர் மனதை மாற்றி விட முடியாதா?'' என்று கேட்டாள். அவளும் ''எனக்கு மந்திரம் கற்றுக் கொடுத்தவர் முதலில் பிறரைக் கெடுக்கும் மந்திரங்களைத்தான் கற்றுக்கொடுத்தார். மற்ற மந்திரங்களைக் கற்றுக் கொடுக்குமுன் அவர் ஓரிடத்தில் வழுக்கி விழுந்து இறந்து போய் விட்டார்'' என்றாள்.

அப்போது ஒரு முள்ளம் பன்றி வந்து தரையைக் கிளறி கிழங்கை எடுக்க முயலவே காளியம்மா ஏதோ மந்திரத்தைக் கூற அது ஒரு நண்டாக மாறியது. இதைக் கண்ட லட்சுமி ''பேஷ்! இதை மீண்டும் முள்ளம் பன்றியாக மாற்ற முடியுமா?'' என்று கேட்டாள். அப்போது காளியம்மா ''அதுதான் என்னால் முடியாது என்று கூறிவிட்டேனே. இந்த நண்டை ஒரு புழுவாக வேண்டுமானால் மாற்ற முடியும். ஆனால் அதன் முந்தைய உருவத்தை மட்டும் கொடுக்க முடியாது. நான் மட்டும் எப்படி வேண்டுமானாலும் மாற முடியும்'' என்றாள். அப்போது லட்சுமி ''ஐயோ பாவம்! அந்த முள்ளம்பன்றிக்கு விடிவு காலமே இல்லையா?'' என்று கேட்டாள்.

காளியம்மா சிரித்தவாறே ''ஏன் இல்லாமல்? எந்த சாபத்திற்கும் முறிவு என்பது உண்டே. அதுபோல இதற்கும் ஒரு வழி உண்டு. ஆனால் அது அவ்வளவு சுலபமாக நடந்து விட முடியாது. ஏனெனில் நான் இறந்து விட்டால் அது முன் போலாகி விடும்'' என்றாள். லட்சுமி சற்று நேரம் பேசாமல் இருந்து விட்டு காளியம்மாவுக்கு நன்றி செலுத்துவது போல ''என் சந்தேகங்கள் எல்லாம் தீர்ந்தன. நீ என்



பெரிய அத்தானை மணந்து கொள்ளப் போகிறாய். இதில் சற்றும் சந்தேகமே இல்லை.'' என்றாள்.

அதுகேட்ட காளியம்மா ''உண்மையாகவா? அதெப்படி நடக்கும்? நான் விகாரமாக இருக்கிறேன் என்று கூறுகிறாயே. அவர் என்னை மணக்கும்படி நீ செய்வாயா?'' என்று கேட்டாள். லட்சுமியும் ''ஓ! வெகு சுலபமாக செய்து விடுவேன். என் பெரிய அத்தானை ஒரு முனிவர் சபித்து விட்டார். அழகாக உள்ள அவர் ஒரு அழகான பெண்ணை மணந்தால் அவரது தலை வெடித்து சுக்கல் சுக்கலாக ஆகி விடும். அதற்காகத்தான் விகாரமான பெண் எங்கேயாவது கிடைப்பாளா என்று தேடி அலைந்து கொண்டிருக்கிறேன். இப்போதே வா. இருட்டாகிக் கொண்டிருக்கிறது. ஆனாலும் பரவா

யில்லை'' என்றாள். காளியம்மாவும் ''ஆஹா! என் விகார முகமே எனக்கு உதவுகிறதா? வா! வா! உன் பெரிய அத்தானைப் போய்ப் பார்க்கலாம்'' என்று ஆவலுடன் கூறினாள். லட்சுமி அவனை அழைத்துக் கொண்டு ஆறு முகத்தின் குடிசை இருக்கும் இடத் திற்கு அழைத்துச் சென்றாள். அப் போது காளியம்மா ஏதோநினைத்துக் கொண்டு ''உன் பெரிய அத்தான் எனக்குப் பிடித்தவனா என்று நான் பார்க்க வேண்டும்'' என்றான்.

அப்போது லட்சுமி ''ஆமாம். நீ சொல்வது சரிதான். மணமகனுக்கு மணமகளையும், மணமகளுக்கு மண மகனையும் பிடித்திருந்தால்தான் அவர்கள் மணம் புரிந்து கொண்டு மகிழ்ச்சிகரவாழ்க்கையை நடத்த முடி யும். எனவே முதலில் நீ போய் என் அத்தானைப்பார்த்து விட்டு வந்து உன் அபிப்பிராயத்தைச் சொல். அதற்காக நீ ஒரு குருவியின் உருவம் எடுத்துக் கொண்டு இந்த ஜன்னல் வழியாக குடிசைக்குள் போ'' என்று யோசனை கூறினாள். காளியம்மாவும் அப்படி செய்வதாகக் கூறிக் குருவியாக மாறி னாள் அக்குருவியை லட்சுமி சட் டெனப் பிடித்து அதன் கழுத்தைத் திருகிக் கொன்று குடிசைக்குள் விட் டெறிந்தாள்.

இருட்டில் தன்மீது வந்து விழுந்த குருவியைக் கழுகாகி இருந்த ஆறு முகம் தன் அலகால் கொத்திக் குதறி னான். இவ்வாறு காளியம்மா இறக் கவே கழுகாக இருந்த ஆறுமுகம் தன் சுய உருவத்தை அடைந்தான். அவன் லட்சுமியை ஆச்சரியத்துடன் பார்க்கவே அவளும் ''இனி கவலை இல்லை. அந்தக் காளியம்மா ஒழிந் தாள். தந்திரமாக அவள் எப்படி இறப்பாள் என்று கேட்டுக் கொண்டு அவளை இங்கு அழைத்து வந்தேன். அவளை ஒரு குருவியாக மாற வைத்து அதைப் பிடித்து கழுத்தைத் திருகிக் கொன்றேன். பிறகு அதை உங்கள் மீது எறிய நீங்களும் அதைக் குதறி விட் டீர்கள்'' என்று தான் செய்ததை விவர மாகக் கூறினாள்.

ஆறுமுகம் தன் நன்றியைத் தெரி வித்துக் கொண்டான்.

லட்சுமி அவனை அழைத்துக் கொண்டு அவனது ஊருக் குச் சென்றான். விரைவில் அவர்களது திருமணமும் நடைபெற்றது.



# வாய் வீரம்

அது ஒரு பழங்கால சத்திரம். அந்த வழியே சந்தைக்குச் சென்று திரும்புபவர்கள் இரவு நேரங்களில் அங்கு தங்கிச் செல்வது வழக்கம். ஒரு நாள் இரவு ஒரு மாடு மேய்ப்பவன், ஒரு தோட்டக்காரன், ஒரு காவலாளி மூவரும் சத்திரத்தில் தங்க வந்தபோது அறிமுகமானார்கள். மூவரும் தங்களைப் பற்றி பெருமையாகப் பேசினர். மாடு மேய்ப்பவன் சொன்னான்.

''நான் காளை மாடு மாதிரி கத்தினால் அக்கம் பக்கத்தில் இரண்டு மைல் தூரத்துக்குள் நிற்கும் மாடுகள் எல்லாம் சிதறிப் போக வேண்டியது தான்''. தோட்டக்காரன் சொன்னான்.

''நான் வேட்டை நாய் மாதிரி குரைத்தால் தோட்டத்துக்குள் வந்த திருடன் பயந்து மரத்துக்கு மேல் ஏறவேண்டியதுதான்''. காவலாளி சொன்னான்.

''பூ இவ்வளவுதானா? நள்ளிரவு நேரத்தில் நான் கோழி மாதிரி கொக்கரக்கோ என்று கூவினால் வேறு வழியில்லாமல் சூரியன் உடனே கிழக்கில் உதிக்க வேண்டியது தான்''

அந்த சத்திரத்தில் இந்த மூவரின் வீரப் பிரதாபங்களைப் பற்றி கேட்டுக் கொண்டு ஒரு மூலையில் படுத்திருந்த வேட்டைக்காரன் ஒருவனுக்கு இவர்களோடு கொஞ்சம் விளையாடிப் பார்க்க ஆசை வந்தது. உடனே புலி மாதிரி சப்தம் போட்டான்.



இதைக் கேட்டதும் அந்த மூன்றுபேரும் நிஜமாகவே புலிதான் வந்து விட்டது என்று நம்பி தமது உடமைகளைக் கூட எடுக்காமல் ஓட ஆரம்பித்தனர்.






## பாகிஸ்தானில் ஜனநாயகம் கண்ணீர் வடிக்கிறது

1947 இல் பழைய இந்தியா இரண்டாகப் பிரிந்தது. அப்போது அதில் பெரும் பகுதி இந்தியா என்றும், சிறிய பகுதி பாகிஸ்தான் என்றும் ஆனது.

மதச்சார்பற்ற நாடாக இந்தியா விளங்கியது. ஆனால் பாகிஸ்தான் 1956 இல் இஸ்லாமிய குடியரசாக தன்னை அறிவித்தது.

சுதந்திரமடைந்த காலத்தில் இரு நாடுகளுமே ஜனநாயகத்தைப் பின்பற்ற உறுதி பூண்டன. தேர்தல்களை ஒழுங்காக நடத்தவும், அதன் மூலம் அரசாங்கத்தை யார் ஏற்க வேண்டும் என்று தீர்மானிக்கும் உரிமையை மக்கள் வசம் விடுவதற்கும் தீர்மானித்தன.

ஜனநாயக முறையானது பல குறைபாடுகளைக் கொண்டிருந்தாலும் மக்களின் அபிலாஷைகளை அது நிறைவேற்றுகிறது என்கிற உயர்ந்த அம்சத்தைக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு கால கட்டத்திலும் அமைதியான முறையில் தமது ஆட்சியாளர்களை மக்கள் மாற்றி வந்திருக்கிறார்கள்.

மதச் சார்பற்ற நாடாகவும், உலகில் மிகப் பெரிய ஜனநாயக நாடாகவும் திகழ்வது இந்தியாவுக்குப் பெருமை தரும் விஷயமாகும். ஆனால் துரதிர்ஷ்டவசமாக இந்த நிலை பாகிஸ்தானில் இல்லை.

1958 இல் மார்ஷல் அயூப்கான் இராணுவப் புரட்சியின் மூலம் ஆட்சிக்கு வந்த போது தனது சர்வாதிகாரத்தைப் பிரயோகித்து அரசியலமைப்பை மாற்றியதுடன் ஜனாதிபதியாகவும் பதவி ஏற்றார். ஆனால் 1969 இல் ஜெனரல் யாஹ்யாகான் அவரது ஆட்சிக்கு முடிவு கட்டினார்.

1971 இல் யாஹ்யா கான் கிழக்கு பாகிஸ்தானிய மக்கள் மீது மிகக் கொடுமையான அடக்குமுறைகளை கட்டவிழ்த்து விட்டார். லட்சக் கணக்கான கிழக்கு பாகிஸ்தானிய மக்கள் அகதிகளாக இந்தியா வரத் துவங்கினர். இதனால் இப் பிரச்சினையில் இந்தியா தலையிட வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. பங்களாதேஷிகளின் ஆதரவுடன் இந்திய ராணுவம் டாக்காவுக்குள் நுழைந்து பாகிஸ்தான் ராணுவத்தைத் தோற்கடிக்க சுதந்திர பங்களாதேஷ் உதயமானது.

இதனால் அவமானமடைந்த யாஹ்யா கான் ஆட்சிப் பொறுப்பை அரசியல்வாதியான பூட்டோவிடம் ஒப்படைத்தார்.

1977 ல் நடந்த மற்றுமொரு கிளர்ச்சியில் ஜெனரல் ஜியா உல் ஹக் அதிகாரத்தைக் கைப்பற்றினார்.



Rs. 30/-



Rs. 40/-



Rs. 30/-



Rs. 30/-



Rs. 25/-



Rs. 30/-

## CHANDAMAMA BOOKS ARE ALREADY A LEGEND! THEY OPEN A NEW HORIZON ON THE WORLD OF LITERATURE FOR THE YOUN

Added to the six titles by **Manoj Das** is the charming seventh–

WHEN THE TREES WALKED

by the inimitable story-teller **Ruskin Bond**



Rs. 30/-

Among the titles in the process of production are:

STORY OF KRISHNA
STORY OF RAMA
STORY OF BUDDHA



For details, write to:

CHANDAMAMA BOOKS
Chandamama Buildings
Vadapalani, Madras - 600 026.

விரைவிலேயே ஜனநாயகத்தை மலரச் செய்வேன் என்று கூறிய அவர் தமது வார்த்தையிலிருந்து தவறினார். ஒரு கொலையுடன் தொடர்புபடுத்தி குற்றவாளியென தீர்ப்பளித்து பூட்டோ தூக்கிலிடப்பட்டார். 1988 ல் மர்மமான ஒரு விமான விபத்தில் ஜியா உல் ஹக் மரணமடைந்தார்.

தேர்தலில் பூட்டோவின் மகளும் பாகிஸ்தான் மக்கள் கட்சியின் தலைவியுமான பெனாசிர் பூட்டோ பிரதமரானார். ஆனாலும் அவரது ஆட்சிக் காலம் குறுகியதாக இருந்தது. ஜனாதிபதி குலாம் இஸாக் கான் அவரைப் பதவி நீக்கம் செய்தார்.

அடுத்து நடந்த தேர்தலில் (1990) இஸ்லாமிய ஜம்ஹூரி கட்சியைச் சேர்ந்த நவாஸ் செரீப் ஆட்சியைப் பிடித்தார்.

1993 ல் ஜனாதிபதி அவரைப் பதவி நீக்கம் செய்ய, அதே ஆண்டில் நடந்த தேர்தலில் பெனாசிர் பூட்டோவின் கட்சி ஆட்சியைப் பிடித்தது. பெனாசிர் பிரதமரானார். 1997 ல் பெனாசிர் பதவி நீக்கம் செய்யப்பட நவாஸ் ஷெரீப் பிரதமரானார்.

12.01.99 அன்று பிரதமரால் ராணுவத் தளபதி ஜெனரல் பர்வீஜ் முஷரப் திடீரென பதவிநீக்கம் செய்யப்பட்டார். தொடர்ந்து ஏற்பட்ட ராணுவப் புரட்சியின் மூலம் முஷரப் அதிகாரத்தைக் கைப்பற்றினார். ஏராளமான குற்றச்சாட்டுகளின் பேரில் ஷெரீப் சிறை வைக்கப்பட்டார்.

இந்த அசாதாரண மாற்றத்தை உலகத் தலைவர்கள் யாரும் ஆதரிக்கவில்லை.

ஷெரீப் எதைச் செய்தாரோ அதைத் தமது அதிகார வரம்புக்கு உட்பட்டு நின்றே செய்தார்.

அதிகாரி ஒருவரைப் பதவி நீக்கம் செய்யும் அதிகாரம் பிரதமருக்கு உண்டு. ஆனால் முஷரப் செய்தது ஜனநாயகத்துக்கும் அரசியலமைப்புக்கும் எதிரான செயல் ஆகும்.

மொத்ததில் முஷரப்பின் செயல்களுக்கு. எதிராகவே முழு உலகத்தின் கருத்தும் உள்ளது.



# வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம்.
இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.



போட்டோ வாக்கியப்
போட்டி
அம்புலிமாமா
வடபழநி
சென்னை-600 026.





போட்டிக் கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி ஜனவரி 25-ம் தேதிக்குள் மேலே உள்ள முகவரிக்கு வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் 2000 மார்ச் மாத இதழில் வெளியிடப்படும்.
சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு.

## வாழ்த்துக்கள்



மே'98 போட்டியில் பரிசு
பெற்றவர் :
பா.மு. பாண்டியன்,
பாபநாசம், திருநெல்வேலி
மாவட்டம்.



**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவது போட்டோ: கொடுப்பதில் பூரிப்பு
இரண்டாவது போட்டோ : காண்பதில் களிப்பு